


# صفة الحج، والعمرة، والزيارة

## (باللغة التاملية)

**جمع وإعداد: محمد رضوان محمد جنيد**

(خريج كلية الحديث الشريف والدراسات الإسلامية بالمدينة المنورة)

# ஹஜ் உம்ரா வழிகாட்டி

**அஷ்ஷைக்: எம். ஜே. எம். ரிஸ்வான் மதனி, M.A.Cey**

ﷺ

புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தமானது. அவனது அருளும் சாந்தியும் நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் மீதும், அவர்களின் வழிநடந்த நபித்தோழர்கள், இமாம்கள், உலக முஸ்லிம்கள் அனைவர் மீதும் உண்டாகுவதோடு, மண்ணறைகளில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற முஸ்லிமான சகோதர, சகோதரிகள் அனைவர் மீதும் நிலையாக உண்டாகட்டுமாக!

**புனித ஹஜ் கடமையினை நிறைவேற்ற இருக்கும் சகோதரர்களே!**

நபி இப்ராஹீம் (عليه السلام) அவர்கள் விடுத்த அழைப்பிற்காக பல்லாயிரக்கணக்கான ரூபாய்களை செலவு செய்து, உலகிலேயே முதல் இறை இல்லமான புனித க.்.பாவிற்கு ஹஜ்ஜுக்காக செல்லும் உங்கள் ஹஜ் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜாக இருக்கவும், அப்புனித இல்லத்தில் நீங்கள் எமக்காக பிரார்த்திக்கவும் முடியுமான அளவு முயற்சிகள் செய்து, அல்குர்ஆன், ஆதாரபூர்வமான ஹதீஸ்களில் இருந்து ஹஜ், உம்ரா, ஸியாரத் பற்றிய விளக்கக் குறிப்பேட்டை எடுத்தெழுதியுள்ளோம்.

இங்கு எந்த மத்ஹபையும் சாராது முன்வைக்கப்படும் செய்திகளால் சில வேளை அது சார்ந்தோருக்கு ஆச்சரியத்தை தந்தாலும் அதில் உண்மைக்குப் புறம்பானவைகளோ, அல்லது இஸ்லாத்திற்கு முரணான செய்திகளோ கிடையாது. நமது இக்குறிப்பேட்டில் காணப்படும் செய்திகள் நாமறிந்தவரை அல்குர்ஆனுக்கும், நபிவழிக்கும் உடன்பட்டவையாகவே காண்கின்றோம்.

ஆகவே, இதில் உள்ளவற்றை நீங்கள் மிகக்கவனமாகவும், நிதானமாகவும் படியுங்கள், ஆதாரமற்றவை என உங்களால் ஆதாரத்துடன் சுட்டிக்காட்டப்படுபவை -இன்ஷா அல்லாஹ்- திருத்திக் கொள்ளப்படும்.

ஹஜ் முகவர்கள் பலர் பிரசுரிக்கும் பெரிய நூல்களில் காணப்படும் ஆதாரமற்ற, மற்றும் மார்க்கத்திற்கு நேர்முரணான மாபெரும் தவறுகள் அல்லாஹ்வின் உதவியால் இதில் இருக்கவே முடியாது . உங்களின் "ஹஜ்"

அங்கீகரிக்கப்பட்ட ஹஜ்ஜாக மாறவேண்டும் என்பதே எமது ஆள்மனதில் வேரூன்றிய எண்ணமாகும்.

பல அறிஞர்களின் நூல்களின் துணை கொண்டே இது தொகுக்கப்பட்டுள்ளது. உங்கள் மனங்களைப் புண்படுத்தும் நோக்குடன் **மத்ஹப், மௌலவி** என்ற சொற்பிரயோகங்கள் ஆளப்படவில்லை.

இதைப் படித்து அமுல் செய்யும் பாக்கியம் பெறும் நீங்கள் ஹஜ்ஜின் இறுதியில் இதன் நன்மைகள் பற்றி பேசுவீர்கள். அல்லாஹ்விடம் எமக்காக நிச்சயம் பிரார்த்தனையும் செய்வீர்கள். அதையே நாம் உங்களிடம் எதிர்பார்க்கின்றோம். அல்லாஹ் நம்மனைவரையும் பொருந்திக் கொள்வானாக!

இவண்:-

எம். ஜே. எம். ரிஸ்வான் (மதனி)

**மொபைல்:- 0094773730852**

**E: mail: rizwanmadani71@yahoo.com**

## ஹஜ் பயணத்திற்கு முன் :

**பணம் தூயவழியில் பெறப்பட்டதா? என சுயபரிசோதனை செய்தல்.**

தூய முறையில் பெறப்பட்ட பணத்திலே ஹஜ் செய்ய வேண்டும். அல்லாஹ்வின் அருட்பாக்கியம் பெற்ற மக்களைத் தவிர ஏனெயோர் இந்த விஷயத்தில் தமது பொருளீட்டல் முறைபற்றி பரிசோதிக்க வேண்டியவர்களே! பிற மனிதர்களிடம் சுரண்டப்பட்ட பணங்கள் மீட்டப்படல் வேண்டும். அநீதி இழைக்கப்பட்டோரிடம் மன்னிப்புக் கோர வேண்டும், இனியும் இவ்வாறான பாவங்கள் பக்கம் மீள்வதில்லை என உறுதிபூண வேண்டும்.

**அல்லாஹ்வுக்காக நிறைவேற்றுதல்.**

அல்லாஹ்வுக்காக அல்லாது பிறருக்காக செய்யப்படும் வணக்கங்களின் முதல் நிலையில் புனித ஹஜ் ஆகிவிட்டதோ என எண்ணத்தோன்றுகின்றது. ஹாஜியார், ஹாஜி, ஹாஜிம்மா, ஹாஜியானி, அல்ஹாஜ் போன்ற நாமங்கள் சமுதாயத்தில் பவணி வருவதைப்பார்த்தால் ஹாஜிகளின் முகஸ்துதியின் யதார்த்த நிலையைப் புரிந்து கொள்ளலாம்.

ஹாஜிகள் வீடுவீடாகச் சென்று மன்னிப்புக்கோரும் போதும், பள்ளிகளில் ஹஜ்ஜுக்கான முஸாபஹா செய்கின்ற போதும் தற்பெருமை அற்றவர்களாக இருப்பார்களா?

“ஹஜ்” மற்றும் “உம்ரா” பற்றிக் குறிப்பிடும் அல்குர்ஆன், وَأَتِمُّواْ الْحَجَّ وَالْعُمْرَةَ لِلّهِ

“ஹஜ்ஜையும், உம்ராவையும், அல்லாஹ்வுக்காக முழுமைப்படுத்துங்கள்” என்று குறிப்பிடுகிறது. ஒருவர் இக்கடமையினை அல்லாஹ்வுக்காகவே நிறைவு செய்ய வேண்டும் என்பதை இது உணர்த்தவில்லையா?

**நபி வழிமுறை பற்றி அறிந்து செயற்படுதல்.**

இதில்தான் ஒரு ஹாஜியின் ஹஜ்ஜின் திருப்தி தங்கியுள்ளது. இதில் அதிகமானோர் குறைவு செய்வதையே அவதானிக்க முடிகின்றது.

ஒவ்வொருவரும் தான் கொண்ட கொள்கை, அல்லது மத்ஹபு அடிப்படையில் மக்களை ஹஜ் செய்ய பயிற்றுவிக்கிறார்களே அன்றி மாநபியின் வழியில் பயிற்றுவிக்கப்படுவதாக அறியோம்.

நபி (ﷺ) அவர்கள் செய்தது ஒரேயொரு ஹஜ்ஜுதான். ஆனால் அதில் நூற்றுக்கணக்கான வழிமுறைகள் பதிவு செய்யப்படடிருப்பதை பார்க்கின்ற போது நமது ஹாஜிகளை வழி நடத்தும் முகவர்கள் பற்றி கவலைப்பட வேண்டியவர்களாய் இருக்கின்றோம்.

لِتَأْخُذُوا مَنَاسِكَكُمْ فَإِنِّي لَا أَدْرِي لَعَلِّي لَا أَحُجُّ بَعْدَ حَجَّتِي هَذِهِ( صحيح مسلم ) இறுதி ஹஜ்ஜின் போது மக்களிடம், “நீங்கள் உங்கள் ஹஜ்ஜுக்கான வணக்க முறைகளை (என்னில் இருந்து) எடுத்துக் கொள்ளுங்கள் என நபி (ﷺ) அவர்கள் கூறினார்கள் (புகாரி, முஸ்லிம்).

நபியைப் போன்று “ஹஜ்” செய்ய வேண்டியதன் அவசியத்தை நபித்தோழர்களின் வாழ்வில் நடந்த பின்வரும் நிகழ்ச்சி உறுதி செய்கின்றது.

...أَخْبِرْنِي عَنْ حَجَّةِ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ بِيَدِهِ فَعَقَدَ تِسْعًا فَقَالَ إِنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَكَثَ تِسْعَ سِنِينَ لَمْ يَحُجَّ ثُمَّ أَذَّنَ فِي النَّاسِ فِي الْعَاشِرَةِ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ حَاجٌّ فَقَدِمَ الْمَدِينَةَ بَشَرٌ كَثِيرٌ كُلُّهُمْ يَلْتَمِسُ أَنْ يَأْتَمَّ بِرَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَيَعْمَلَ مِثْلَ عَمَلِهِ (مسلم)

முஹம்மத் பின் அலி பின் ஹஸன் என்பவர் ஜாபிர் (ؓ) அவர்களிடம் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களின் ஹஜ்ஜைப் பற்றி எனக்கு அறிவியுங்கள் எனக் கேட்டார். அதற்கு அவர்கள், (ஹிஜ்ரத்தின் பின் நபி (ﷺ) அவர்கள் ஒன்பது ஆண்டுகள் ஹஜ் செய்திருக்கவில்லை என்பதை உணர்த்துவதற்காக) ஒன்பது முறை தனது கையை (விரல்களை) மடக்கிக் காட்டி, ஒன்பது ஆண்டுகள் நபி (ﷺ) அவர்கள் “ஹஜ்” செய்யாது இருந்தார்கள். (ஹிஜ்ரி) பத்தாவது வருடம்தான் “ஹஜ்” செய்யப்போவதாக மக்களுக்கு அறிவிப்பு செய்தார்கள். நபி (ﷺ) அவர்களைப் பின்பற்றிடவும், அவர்கள் அமல் செய்வது போன்று அமல் செய்யவும் (மதீனாவை நோக்கி) பெரும்திரளான மக்கள் வந்து சேர்ந்தனர் ... (முஸ்லிம்).

எனக் குறிப்பிடும் ஜாபிர் (ؓ) அவர்களின் மேற்படி செய்தியை அவதானித்தால் அல்லாஹ்வின் தூதர் (ﷺ) எவ்வாறு **ஹஜ்** செய்தார்களோ அதே போன்று **ஹஜ்** செய்வதாலேயே அதன் பரிபூரண நன்மையைப் பெற்றுக் கொள்ளலாம். என்பதை நபி (ﷺ) அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்கள் விளங்கிய காரணத்தினால்தான் பெரும் திரளான மக்கள் “ஹஜ்” செய்வதற்காக மதீனாவில் நபியுடன் ஒன்று சேர்ந்திருக்கின்றனர் என்பதை விளங்கலாம்.

இதை விடுத்து, **“நமது மத்ஹபே நமக்குப் புகலிடம்”** என்ற நிலையில் **“மத்ஹப்”** சார்ந்த மௌலவிகள் தமது ஹாஜிகளுக்கு குழப்பமான கருத்துக்களை போதிப்பதால் நபி வழிக்கு முரணான பல வழிமுறைகள் அப்புனித பூமியில் அரங்கேற்றப்படுவதை பார்க்கிறோம். அந்த நிலை மாறுவதற்காக ஹஜ்ஜில் நபியின் வழிமுறை பற்றியும் நாம் அறிந்திருப்பது அவசியமாகும்.

## ஹஜ்ஜின் அவசியம்.

ஹஜ் இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் ஒன்றாகும். மக்காவில் இருக்கும் புனித க.ஃபா ஆலயத்தையும், அங்குள்ள புனித இஸ்லாமியசின்னங்களை பிரதானப்படுத்தியும் மேற்கொள்ளப்படும் இவ்வணக்கத்தை, அவ்வில்லம் சென்று நிறைவேற்ற சக்தியும், வசதியும் பெற்ற, வயது வந்த ஒவ்வொரு முஸ்லிமும் வாழ்நாளில் அவசியம் ஒரு தடவை மிகவிரைவாக நிறைவேற்றுவது கடமையாகும்.

وَلِلّهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلاً وَمَن كَفَرَ فَإِنَّ الله غَنِيٌّ عَنِ الْعَالَمِينَ [آل عمران : 97

மனிதர்களில் அல்லாஹ்வின் (இல்லத்திற்கு சென்றுவர) வசதி பெற்றோர் அவ்வில்லத்தை ஹஜ் செய்வது அவர்கள் மீது கடமையாகும். (அத்: ஆலுஇம்ரான். வச: 97)

عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَهَ إِلَّا اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ (متفق عليه)

இஸ்லாம் ஐந்து அம்சங்கள் மீது அமைக்கப்பட்டுள்ளது. (அவை) உண்மையாக வணங்கப்படுவதற்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மத் (ﷺ) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், தூதருமவார்கள், தொழுகையை நிலைநாட்டுதல், ஸகாத் கொடுத்தல், ஹஜ் செய்தல், ரமளானில் நோன்பு நோற்றல் ஆகியனவாகும். (புகாரி, முஸ்லிம்).

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ خَطَبَنَا رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ أَيُّهَا النَّاسُ قَدْ فَرَضَ اللَّهُ عَلَيْكُمْ الْحَجَّ فَحُجُّوا ( مسلم)

எமக்கு பிரசங்கம் நிகழ்த்திய நபி (ﷺ) அவர்கள் "மனிதர்களே! நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது ஹஜ்ஜைக் கடமையாக்கியுள்ளான். ஆகவே விரைந்து ஹஜ் செய்யுங்கள்" என கட்டளையிட்டார்கள் என அபூஹுரைரா (ؓ) அவர்கள் அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்).

மேற்படி கடமையினை ஒருவர் திடகாத்திரமாகவும், உடல்வலிமையோடும் இருக்கின்ற போது செய்கையில் அலாதியான திருப்தி அடைவார். காலம் தாழ்த்தி, வயதான பின்னர் செய்கின்ற போது ஏதோ கடமை முடிந்து விட்டதுதானே என பெருமூச்சு விடுவார் அவ்வளவுதான். அதனால் விரைந்து இக்கடமையை நிறைவேற்ற வேண்டும்.

## ஹஜ்ஜின் சிறப்பு

**ஹஜ் செய்வோர் அல்லாஹ்வின் மன்னிப்பையும், மகத்தான நற்கூலியையும் ஈருலகிலும் பெறுகின்றனர் என்பதை உணர்த்தும் பல நபிமொழிகள் ஹதீஸ் கிரந்தங்களில் இடம் பெற்றுள்ளன. அவற்றில் சில தரப்படுகின்றது.**

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ الْعُمْرَةُ إِلَى الْعُمْرَةِ كَفَّارَةٌ لِمَا بَيْنَهُمَا وَالْحَجُّ الْمَبْرُورُ لَيْسَ لَهُ جَزَاءٌ إِلَّا الْجَنَّةُ (متفق عليه)

ஒரு உம்ரா, மறு உம்ரா வரையுள்ள சிறுபாவங்களுக்குப் பரிகாரமாகும். அங்கீகரிக்கப்பட்ட ஹஜ்ஜின் கூலி சுவனமாகும். என நபிகள் நாயகம் (ﷺ)

அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ﷺ) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம்: புகாரி , முஸ்லிம்).

... أَنَّ الْإِسْلَامَ يَهْدِمُ مَا كَانَ قَبْلَهُ وَأَنَّ الْهِجْرَةَ تَهْدِمُ مَا كَانَ قَبْلِهَا وَأَنَّ الْحَجَّ يَهْدِمُ مَا كَانَ قَبْلَهُ (مسلم )

“இஸ்லாம்” அதற்கு முன்னால் உள்ள பாவங்களை அழித்துவிடும், “ஹிஜ்ரத்” அதற்கு முன்னர் உள்ள பாவங்கைள அழித்துவிடும், “ஹஜ்” அதற்கு முன்னருள்ள பாவங்களை அழித்துவிடும் என நபி (ﷺ) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

ஹஜ், உம்ராவின் சிறப்பை எடுத்துக் கூறும் ஆதாரபூர்வமான பல நபி மொழிகள் ஹதீஸ் நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ள போதிலும் விரிவை அஞ்சி இந்த ஹதீஸுடன் போதுமாக்கிக் கொள்ளப்படுகிடுகின்றது.

## வருடந்தோறும் ஹஜ் செய்வது கடமையா?

வாழ்நாளில் ஒரு தடைவ **ஹஜ்** செய்வதே கடமை. வருடாவருடம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்பதை பின்வரும் நபிமொழியின் மூலம் உறுதி செய்யலாம்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ خَطَبَنَا رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ أَيُّهَا النَّاسُ قَدْ فَرَضَ اللَّهُ عَلَيْكُمْ الْحَجَّ فَحُجُّوا فَقَالَ رَجُلٌ أَكُلَّ عَامٍ يَا رَسُولَ اللَّهِ فَسَكَتَ حَتَّى قَالَهَا ثَلَاثًا فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَوْ قُلْتُ نَعَمْ لَوَجَبَتْ وَلَمَا اسْتَطَعْتُمْ** (مسلم)

நபி (ﷺ) அவர்கள் எமக்கு உரை நிகழ்த்தினார்கள். அதில் மனிதர்களே! நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது ஹஜ்ஜை கடமையாக்கி உள்ளான். ஆகவே நீங்கள் **ஹஜ்** செய்யுங்கள் எனக் கூறினார்கள். ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரே! வருடந்தோறுமா ? (செய்யவேண்டும்)? ஏனக் கேட்டார். நபி (ﷺ) அவர்கள் எதுவும் பேசாது, அவர் மூன்று தடவைகள் கேட்கும் வரை மௌனமாக இருந்து விட்டு, “நான் ஆம் (கடமைதான்) எனக் கூறினால் அது கடமையாகி விடும், நீங்கள் அதனை நிறைவு செய்ய சக்தி பெறமாட்டீர்கள்” எனக் கூறினார்கள். (முஸ்லிம்).

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَنْ حَجَّ هَذَا الْبَيْتَ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّهُ – صحيح البخاري –

யார் ஒருவர் இந்த வீட்டை ஹஜ் செய்து, (மற்றொரு அறிவிப்பில்: அல்லாஹ்வுக்கான ஹஜ் செய்து ) அவர் (தனது மனைவியுடன்) உடலுறவு கொள்ளாது, தீய செயல்களில் (செயலால், வார்த்தையால்) ஈடுபடவில்லையோ அவர் தனது தாய் அன்றுதான் பெற்றெடுத்தவர் போன்றவராக மீள்கின்றார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)

عن عَائِشَةُ إِنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ مَا مِنْ يَوْمٍ أَكْثَرَ مِنْ أَنْ يُعْتِقَ اللَّهُ فِيهِ عَبْدًا مِنْ النَّارِ مِنْ يَوْمِ عَرَفَةَ وَإِنَّهُ لَيَدْنُو ثُمَّ يُبَاهِي بِهِمْ الْمَلَائِكَةَ فَيَقُولُ مَا أَرَادَ هَؤُلَاءِ –صحيح مسلم

அர.்.பா தினத்தில் அல்லாஹ் நரகில் இருந்து அடியார்களை விடுதலை செய்வது போன்று வேறு எந்த தினத்திலும் அதிகமான நரகவாதிகளை விடுதலை செய்வதில்லை. அவன் அவர்களை நெருங்கிவருகின்றான். பின்னர் அவர்கள் பற்றி வானவர்களிடம் பெருமையாகப் பேசி, இவர்கள் என்ன எதிர்ப்பார்க்கின்றனர் என்றும் கேட்கின்றான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

## இயலாத பெற்றோருக்கான ஹஜ்

உலகில் பிள்ளைகள் மரணித்த, அல்லது இயலாத தமது பெற்றோருக்குச் செய்கின்ற மிகப் பெரிய நல்ல காரியங்களில் இதுவும் ஒன்றாகும்.

عَنْ ابْنِ عَبَّاسٍ أَنَّ امْرَأَةً مِنْ خَثْعَمَ سَأَلَتْ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ غَدَاةَ جَمْعٍ فَقَالَتْ يَا رَسُولَ اللَّهِ فَرِيضَةُ اللَّهِ فِي الْحَجِّ عَلَى عِبَادِهِ أَدْرَكَتْ أَبِي شَيْخًا كَبِيرًا لَا يَسْتَمْسِكُ عَلَى الرَّحْلِ أَفَأَحُجُّ عَنْهُ قَالَ نَعَمْ (بخاري) وفي رواية له :– وَذَلِكَ فِي حَجَّةِ الْوَدَاعِ (متفق عليه)

'ஹஸ்அம்'' கோத்திரத்தைச் சேர்ந்த பெண்மணி ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே, **ஹஜ்** அல்லாஹ்வின் அடியார்கள் மீதுள்ள அவனது கடமையாக இருக்கின்றது. எனது தந்தை வாகனத்தில்

அமர முடியாத அளவு முதியவராக இருக்கின்றார். ஆகையால் அவருக்காக நான் **ஹஜ்**ஜை நிறைவேற்றலாமா?” எனக் கேட்டார். “ஆம். அவருக்காக நீ **ஹஜ்** செய்து கொள்” என நபி (ﷺ) அவர்கள் பதில் கூறினார்கள். (புகாரி,) புகாரியின் மற்றொரு அறிவிப்பில், இது **“ஹஜ்ஜத்துல் வதா”** வில் நபி (ﷺ) அவர்களின் இறுதி ஹஜ்ஜின் போது நடை பெற்றதாகும் எனக் கூறப்பட்டுள்ளது.

**عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ أَتَى رَجُلٌ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ لَهُ إِنَّ أُخْتِي قَدْ نَذَرَتْ أَنْ تَحُجَّ وَإِنَّهَا مَاتَتْ فَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَوْ كَانَ عَلَيْهَا دَيْنٌ أَكُنْتَ قَاضِيَهُ قَالَ نَعَمْ قَالَ فَاقْضِ اللَّهَ فَهُوَ أَحَقُّ بِالْقَضَاءِ (صحيح البخاري)**

நபி (ﷺ) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, எனது சகோதரி **ஹஜ்** செய்ய நேர்ச்சை செய்திருந்தார், (அதற்குமுன்னர்) மரணித்துவிட்டார் எனக் கூறினார், அவள் மீது கடன் இருப்பின் நீ அதை நிறைவேற்றுவாய்தானே என அவரிடம் நபி (ﷺ) அவர்கள் கேட்டார்கள், அவர் ஆம் என்றார், அப்படியானால் அல்லாஹ்வுக்குரிய கடனை நிறைவேற்று, அவன் நிறைவேற்ற மிகவும் தகுதியானவன்எனக் கூறினார்கள் (புகாரி).

## பிறருக்காக ஹஜ் செய்தல்

ஒருவர் தனது பெற்றோருக்காக, அல்லது உறவினர்களுக்காக ஹஜ் செய்வதாயின் முதலாவதாக அவர் தனக்குரிய ஹஜ்ஜை நிறைவேற்றி இருக்க வேண்டும்.

**عَنْ ابْنِ عَبَّاسٍ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ سَمِعَ رَجُلًا يَقُولُ لَبَّيْكَ عَنْ شُبْرُمَةَ قَالَ مَنْ شُبْرُمَةُ قَالَ أَخٌ لِي أَوْ قَرِيبٌ لِي قَالَ حَجَجْتَ عَنْ نَفْسِكَ قَالَ لَا قَالَ حُجَّ عَنْ نَفْسِكَ ثُمَّ حُجَّ عَنْ شُبْرُمَةَ (أبوداود)**

ஒருமனிதர் **“லைப்பைக்க -அன்- ஷுப்ருமா”** இது “ஷுப்ருமா என்பவருக்கான” ஹஜ், எனக் கூறியபோது “யார் அந்த **ஷுப்ருமா** என நபி (ﷺ) அவர்கள் வினவினார்கள். அவர், “எனது சகோதரர், அல்லது உறவினர் எனப் பதில் கூறினார். நீ உனக்காக ஹஜ் செய்து விட்டாயா?” எனக் கேட்டார்கள். “இல்லை” என்றதும் (முதலில்) உனக்காக **ஹஜ்** செய்,

பின்வருங்காலங்களில் **ஷுப்ருமா** விற்காக **ஹஜ்** செய்' எனக் கூறினார்கள். (அபூதாவூத்)

### மஹ்ரமின்றி ஒருபெண்ணோ, அல்லது பல பெண்களோ தனித்து ஹஜ்ஜுக்காக செல்ல முடியுமா?

**ஹஜ்** இஸ்லாத்தின் ஐம்பெரும் பிரதான கடமைகளில் ஒன்றாகும். அதனை ஒரு ஆண் தனிமையாக நிறைவேற்ற அனுமதி இருப்பது போன்று ஒரு பெண் செய்ய மார்க்கத்தில் அனுமதி இல்லை.

**عَنْ ابْنِ عَبَّاسٍ عَنْ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ لَا يَخْلُوَنَّ رَجُلٌ بِامْرَأَةٍ إِلَّا مَعَ ذِي مَحْرَمٍ فَقَامَ رَجُلٌ فَقَالَ يَا رَسُولَ اللَّهِ امْرَأَتِي خَرَجَتْ حَاجَّةً وَاكْتُتِبْتُ فِي غَزْوَةِ كَذَا وَكَذَا قَالَ ارْجِعْ فَحُجَّ مَعَ امْرَأَتِكَ (متفق عليه)**

நபி (ﷺ) அவர்கள் ஒரு நாள் தனது உரையில், **"அந்நிய ஒரு பெண்ணுடன் எந்த ஒரு ஆணும் தனித்திருக்க வேண்டாம்",** மஹ்ரம் (மணம் முடிக்க மார்க்கத்தில் தடை செய்யப்பட்டவர், அல்லது கணவர்) உடனே அன்றி பயணம் செய்ய வேண்டாம் எனக் கூறியதை செவிமடுத்த ஒரு மனிதர் எழுந்து, "அல்லாஹ்வின் தூதரே! நான் இன்ன, இன்ன போர்களில் கலந்து கொள்ள வேண்டும் எனப் பதியப்பட்டிருக்கிறேன், எனது மனைவியோ **ஹஜ்** செய்வதற்காக புறப்பட்டு சென்று விட்டார் என்றார். **"உடன் திரும்பிப் போய், உனது மனைவியுடன் ஹஜ் செய்" எனப் பணித்தார்கள்.** (புகாரி, முஸ்லிம்).

இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டே ஒரு பெண்ணோ, அல்லது பல பெண்களோ (திருமணம் முடிக்க தடை செய்யப்பட்ட) மஹ்ரமான ஆண்கள் துணையின்றி தனிமையில் **ஹஜ்** பயணமோ, அல்லது வேறு பயணமோ செல்லக் கூடாது எனக் கூறுகின்றோம்.

இதற்கு தவறான வியாக்கியானம் செய்யும் ஷா.ஃபிமத்ஹபைச் சார்ந்தோர் **"நம்பகமான பெண்கள் பலருடன் சேர்ந்து ஒரு பெண் ஹஜ்ஜை நிறைவேற்றலாம்"** என வாதிடுகின்றனர். ஒரு பெண் தனிமையில் பள்ளிக்குச் சென்று தொழுகையை நிறைவேற்றுவது போன்று **ஹஜ்** செய்யச் செல்லலாமா? முடியாதா என்ற வாதப்பிரதிவாதங்கள் மார்க்க அறிஞர்கள் வட்டத்தில் காணப்பட்டாலும் "மஹ்ரம்" என்ற ஆண் துணையுடன் **ஹஜ்** செய்வதையே நபி (ﷺ) அவர்கள் கட்டாயப்படுத்தி இருப்பதைப்

பார்க்கின்றோம். ஒரு பெண் மஹ்ரம் இன்றி ஹஜ் செய்ய முடியாது என்பதையே நாம் சரியான கருத்தாகவும் கொள்கின்றோம்.

ஐயம்: ஹஜ்குழுவினர் சிலர், தமது ஹஜ் குழுவுடன் ஒருவரை அதிகரித்துக் கொள்வதற்காக, தமது வசதிக்காக பெண்கள் பலருடன் ஒரு பெண் செல்வதில் தவறில்லை என்கின்றனர். **உண்மையில் இக்கூற்றிற்கு அவர்கள் சார்ந்திருக்கும் மத்ஹபின் பெயரால் எழுதப்பட்டுள்ள கருத்துக்களும் ஒரு காரணமே!**

மேலும், குர்ஆன், சுன்னாவைப் பின்பற்றும் சிலர் ஒருபடி மேலே சென்று ஒரு சில அறிஞர்கள் தனிமையாக ஹஜ் செய்யலாம் என்பதற்கு “அதிய்யே அல்ஹீரா என்ற நகரைப்பார்த்திருக்கிறாயா? நான் அதைப்பார்த்தில்லை. அது பற்றி கேள்விப்பட்டுள்ளேன் எனக் கூறினேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் அவர்கள் “நீ நீண்ட காலம் வாழ்ந்தால் தனது ஒட்டகத்தில் பயணம் செய்யும் ஒரு பெண் அந்த அல்ஹீராவில் இருந்து க.்.பா வரை வந்து (தன்னந்தனியே) தவா.்.ப் செய்வாள். அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் அவள் அஞ்சமாட்டாள்.” (புகாரி 3328) எனக் கூறிய அதிய் பின் ஹாதிம் (ؓ) அவர்கள் அறிவிக்கும் செய்தியை ஆதாரமாகக் கொண்டு ஒரு பெண் ஹஜ்ஜுக்காக தனிமையில் பயணம் மேற்கொள்வதில் தவறில்லை என்கின்றனர்.

**விளக்கம்:** நம்பகமான பெண்களுடன் செல்லலாம் என்றால் ஏன் அந்த நபித்தோழரை அவரது மனைவியுடன் ஹஜ்ஜை நிறைவேற்றும்படி நபி (ﷺ) அவர்கள் பணித்தார்கள்.? நபி (ﷺ) அவர்களின் காலத்தில் வாழ்ந்த ஆண்களையும், பெண்களையும் விடவுமா இந்தக்காலத்துப் மக்கள் நம்பிக்கையிலும், நாணயத்திலும் உயர்ந்தவர்களா !!!

அதி பின் ஹாதிம் (ؓ) அவர்களின் ஹதீஸ் அச்சம், பீதி அற்ற ஒரு காலத்தை அதுவும் முன்னறிவிப்பு ஒன்றைக் குறிக்கின்றது. நபி (ﷺ) அவர்களின் காலத்தில் நடை பெற்ற வழிப்பறிக் கொள்ளை, வறுமை ஆகியவற்றை முறைப்பாடு செய்த போதே இந்த முன்னறிவிப்பைக்

கூறினார்கள். தனது காலத்தைக்கூட அச்சம், பீதி, வறுமை அற்ற காலம் எனக் கூறவில்லை.

மாற்றமாக அதை ஒரு முன்னறிவிப்பாகவே கூறினார்கள். அது அதி (ﷺ) அவர்களின் வாழ்நாளிலேயே நடந்தேறியது. இதை உண்மைப்படுத்தும் வகையில் அதன் அறிவிப்பாளரான அதிய் (ﷺ) அவர்கள் இது பற்றிக்குறிப்பிடுகின்ற போது, **“ஒரு பெண் ஒட்டகத்தில் ஏறி அந்த அல்ஹீராவில் இருந்து க.ஃபாவரை வந்து (தனிமையாக) தவா.ஃப் செய்வதைக் கண்டேன். அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் அவள் அஞ்சமாட்டாள்”, என குறிப்பிடுகிறார்கள்.**(புகாரி).

இப்படியான காலத்துடன் கொலைகளும், கொள்ளைகளும் மலிந்து காணப்படும் இந்தக்காலத்தை ஒப்பிடலாமா என்றால், அனைவரும் இல்லை! என்றே கூறுவர். உலகில் அச்சமற்ற நாடுகளில் முன்னணி நாடு என போற்றப்படும் சவூதி அரேபியாவில் கூட கணவனுடன் ஹஜ் செய்யச் சென்ற பெண்கள் பலர் கடத்திக் கற்பழிக்கப்பட்டு, கொலை செய்யப்பட்டிருக்கின்றனர் என்றால் நடந்தேறிய முன்னறிவிப்பைக் கொண்டு பெண்கள் தனிமையில் ஹஜ் செய்யலாம் என முடிவு செய்வது ஹதீஸுக்கு உடன்பாடான விளக்கமாகத் தெரியவில்லை.

**ஐயம். அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் ஜமல் போரின் போது கூபா நோக்கி பயணித்துள்ளார்களே! நாம் ஹஜ்ஜுக்காக செல்வதை எவ்வாறு தவறாகக் கொள்ள முடியும் ?**

**தெளிவு:-** இது அவர்களின் தனிப்பட்ட ஒரு முடிவாகும். நபித்தோழர்கள் பலர் இதனை விரும்பவில்லை. அப்படி இருந்தும் இஸ்லாத்தில் சமரசம் செய்துவைத்தல் விரும்பத்தக்க செயல் எனக் காரணம் காட்டியே அவர்கள் அவ்வாறு புறப்பட்டதாக வரலாறு சொல்கிறது. அத்துடன், பிற்காலத்தில் தனது இந்தத்தவறை உணர்ந்த அன்னை அவர்கள் அவர்களது முந்தானை நனையும் அளவு அழுது கண்ணீர் வடித்துள்ளார்கள் என ஆதாரபூர்வமான செய்திகள் குறிப்பிடுவதைக் கவனித்தால் இது போன்ற செய்திகள் ஆதாரமாகக் கொள்ள முடியாதவை என்பதை அறியலாம்.

நபி (ﷺ) அவர்களின் மேற்படி கட்டளையை மீறி ஸஹாபிப் பெண்கள் யாராவது இவ்வாறு சென்றிருப்பார்களாயின், அவர்கள் என்ன ஆதாரத்தின் அடிப்படையில் சென்றார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும். பின் அவர்களின் விருப்பம் மார்க்கமாக முடியாது என்பதையும் முடிவு செய்ய வேண்டும்.

தமது மனைவியர் மாற்றானுடன் புன்முருவல் பூப்பதையே விரும்பாத இம்மேதாவிகள், மாற்றான் மனைவி தனது குரூப்பில் இணைந்து **ஹஜ்** செய்வதை அனுமதிக்கிறார்கள் என்றால் அதில் உலகியல் இலாபமின்றி வேறு என்னதான் இருக்க முடியும்?

## ஹஜ்ஜுக்கான காலங்கள்.

ஹஜ்ஜுக்கான காலங்களாக, **ஷவ்வால், துல்க.்.தா, துல் ஹிஜ்ஜா** ஆகிய மாதங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஒருவர் ஷவ்வால் மாதத்தில் இருந்து துல்ஹஜ் பிறை எட்டுவரை ஹஜ்ஜுக்காக தன்னைத் தயார் படுத்தலாம். அதேவேளை உம்ராவிற்கென கால நிர்ணயம் கிடையாது.

ஹஜ்ஜுடன் இணைந்து செய்யப்படும் உம்ராவாக இருப்பின் அதை மேற்குறிப்பிட்ட மாதங்களிலேயே நிறைவேற்ற வேண்டும். (விபரம் பின்னர் தரப்படும்).

**الْحَجُّ أَشْهُرٌ مَّعْلُومَاتٌ مَن فَرَضَ فِيهِنَّ الْحَجَّ فَلاَ رَفَثَ وَلاَ فُسُوقَ وَلاَ جِدَالَ فِي الْحَجِّ** (البقرة : 197 ) ஹஜ்

(ஜுக்குரிய காலம்) அறியப்பட்ட சில மாதங்களாகும். ஆகவே எவர் அவற்றில் (தன்மீது) ஹஜ்ஜைக் கடைமையாக்கிக் கொண்டாரோ அவர் (**ஹஜ்** கடமைக்குள் பிரவேசத்த பின்னர்) உடலுறவு கொள்வதோ, தீய செயல்கள் புரிவதோ, வீண்தர்க்கம் செய்வதோ கூடாது. (அல்பகரா. வச:197).

மேற்படி திருமறை வசனத்தின் அடிப்படையில் பார்த்தால் ஒருவர் மேற்கூறப்பட்ட மாதங்களில் தலைப்பிறை தென்பட்டது முதல் துல் **ஹஜ்**

எட்டுவரையிலும் உள்ள காலப்பகுதியில் **ஹஜ்** செய்வதற்காக தன்னைத் தயார் படுத்திக் கொண்டு மக்கா செல்லமுடியும் என்பதை விளங்கலாம்.

**இஹ்ராமில் நுழைவதற்கான (மீகாத்) எல்லைகள்**

மேற் கூறப்பட்ட கடமையினை நாம் நிறைவு செய்வதற்காக அல்லாஹ்வின் தூதரால் நமக்கு எல்லைகள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. **ஹஜ்,** அல்லது உம்ராவிற்காக அவற்றைக் கடந்து செல்வோர் இஹ்ராம் அணியாது அந்த எல்லைகளைக் கடந்து செலல்லக்கூடாது என்ற உத்தரவாதமும் அவர்களால் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றது. அதையும் மீறி ஒருவர் செல்வாராயின் இஹ்ராம் அணிந்து செல்லாத குற்றத்திற்காக அவர் ∴பித்யா- எனப்படும் குற்றப்பரிகாரம்- நிறைவேற்றுவது அவசியமாகும். (அவற்றைப் பற்றி பின்னர் கவனிப்போம்)

**மதீனா வழியாகச் செல்வோர் “துல்ஹுலைபா” விலிருந்தும், எகிப்து, ஜோர்தான் போன்ற நாடுகளில் இருந்து பணயமாகி “ஜித்தா” வழியாகச் செல்வோர் “ஜுஹ்∴பா” (தற்போதய ராபிஹ்) எல்லையில் இருந்தும், எமன், மற்றும் அதன் வழியாக வருவோர், “எலம்லம்” (தற்போதைய (ஸ∴திய்யா) எல்லையில் இருந்தும் “தாயி∴ப்” வழியாக வருவோர் தாயிபிலுள்ள “அஸ்ஸைலுல் க(B)பீர்” என்றழைக்கப்படும் “கர்னுல் மனாஸில்” எல்லையில் இருந்தும் ஈராக்கிலிருந்து வருவோர் “தாது இர்க்” (தற்போதய லரீ (B)பா) எனும் எல்லையில் இருந்தும், ‘ஹஜ்” அல்லது ‘உம்ரா” விற்கான நிய்யத் செய்து ‘இஹ்ராம்” ஆடை அணிந்து செல்ல வேண்டும்.** இவை நபிகள் நாயகம் (ﷺ) அவர்களால் நிர்ணயிக்கப்பட்ட எல்லை(மீகாத்)களாகும். **ஹஜ்** அல்லது உம்ரா செய்யும் ஒருவர் இஹ்ராம் அணியாது இவைகளைக் கடக்கக் கூடாது. எல்லைகளுக்கு உட்பட்டோர் அவர்கள் தாம் இருக்கும் இடத்தில் இருந்தும், மக்காவாசிகள் மக்காவில் இருந்தும் இஹ்ராம் அணிவர் என நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள். ( நூல்கள் புகாரி முஸ்லிம்).

## எல்லைகளுக்கு உட்பட்டோர், மற்றும் மக்காவாசிகளின் எல்லை.

"எல்லைகளுக்கு **وَمَنْ كَانَ دُونَ ذَلِكَ فَمِنْ حَيْثُ أَنْشَأَ حَتَّى أَهْلُ مَكَّةَ مِنْ مَكَّةَ (متفق عليه)** உட்பட்டோர் தாம் இருக்கும் இடத்தில் இருந்தும், மக்காவாசிகள் மக்காவில் இருந்தும் இஹ்ராம் அணிவர் என நபி (ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள். ( நூல்கள் புகாரி, முஸ்லிம்).

மேற் கூறப்பட்ட எல்லைகளுக்குள் வசிப்போர் தமது வதிவிடங்களை எல்லையாக எடுத்துக் கொள்ள வேண்டும். வேறு எல்லைகளுக்குச் சென்று அங்கிருந்து இஹ்ராம் அணிந்து வர வேண்டிய அவசியம் இல்லை.
என்பதை புகாரி, முஸ்லிம் போன்ற கிரந்தங்களில் இடம் பெறும் நபிமொழிகளில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

**குறிப்பு** :- **"தன்யீம்"** எனப்படும் இடம் ஹரம் எல்லைக்கு அப்பால் இருக்கின்றது. அது மக்காவாசிகளின் உம்ராவிற்கான எல்லை என அறிஞர்கள் குறிப்பிடுவதற்கு அமைவாக மக்காவாசிகளாக இருப்போர் தமது எல்லையாகவும் கொள்ளலாம்.

அதே நேரம் இஹ்ராமுடைய நிலையில் மாதவிடாய் ஏற்பட்டு **"தவா.ஃ.ப்"** மற்றும் "ஸ.ஃ.ய்" செய்ய மார்க்கத்தில் தடை செய்யப்பட்டிருந்த பெண்கள் குளித்து, தூய்மையாகிய பின்பு **தன்யீமில்** இப்போதுள்ள "மஸ்ஜித் ஆயிஷா" பள்ளியில் இருந்து தமது விடுபட்ட உம்ராவிற்கான கடமையை முழுமைப்படுத்த இஹ்ராம் அணிவதற்கான கட்டயாக எல்லையாகக் கொள்ள வேண்டும்.

## ஹஜ் மாதங்களில் உம்ரா செய்யலாம்

ஜாஹிலிய்யா(அறியாமை)க்கால மக்கள் **ஹஜ் மாதங்களில் உம்ராச் செய்வதை பூமியில் நிகழும் பெரும் பாவங்களில் ஒன்றாகக்கருதினர்.**

**மட்டுமின்றி,** முஹர்ரம் என்ற புனித மாதத்தை "ஸ.ஃ.பர்" மாதமாக மாற்றியமைத்த அவர்கள் அந்த ஸபரில் தாம் விரும்பியதைச் செய்து வந்தார்கள். தமது நம்பிக்கையை வெளிப்படுத்தும் விதமாக

**إِذَا بَرَا الدَّبَرْ وَعَفَا الْأَثَرْ وَانْسَلَخَ صَفَرْ حَلَّتْ الْعُمْرَةُ لِمَنْ اعْتَمَرْ (متفق عليه)** (ஒட்டகத்தின்) நோய் நீங்கி, (அதன் மீதுள்ள பயணத்) தடயங்களும் அழிந்து (முஹர்ரம் என்ற )

ஸ.்.பர் மாதமும் கழிந்தால் “உம்ரா” செய்பவரின் உம்ரா செல்லுபடியாகும் எனக் கூறுவர். (ஆதார நூல்: முஸ்லிம்). முஹர்ரம் என்ற ஸ.்.பர் மாதமும் கழிந்த பின்னால் உம்ராச் செய்பவரின் உம்ராவே செல்லுபடியாகும் என்பதே இதன் பொருளாகும்.

இது ஜாஹிலிய்யா (அறியாமை) க்கால மக்களின் நம்பிக்கையே தவிர இஸ்லாமிய மக்களின் நம்பிக்கை அல்ல என்பதை மேற்படி நபிமொழியில் இருந்து விளங்கலாம். இந்த நம்பிக்கையை தகர்த்து எறிவதற்காகவே நபி (ﷺ) அவர்கள் துல்ஹஜ்ஜில் உம்ராச் செய்தார்கள்.

**... قَدِمَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَصْحَابُهُ صَبِيحَةَ رَابِعَةٍ مُهِلِّينَ بِالْحَجِّ فَأَمَرَهُمْ أَنْ يَجْعَلُوهَا عُمْرَةً (متفق عليه)**

நபிகள் (ﷺ) அவர்களும், அவர்களின் தோழர்களும் ஹஜ்ஜுக்காக துல்ஹஜ் பிறை நான்காவது தினத்தில் (மக்கா) வந்திருந்திருந்த போது நபித்தோர்களின் ஹஜ்ஜை தமத்து.்.அடிப்படையிலான (உம்ராவாக) மாற்றும்படி பணித்தார்கள். (பார்க்க: புகாரி, முஸ்லிம்)

“ஹஜ்” மாதங்களில் “உம்ரா” செய்கின்ற ஒருவர் கட்டயாம் ஹஜ் செய்ய வேண்டும், இல்லையெனில் உம்ராச் செய்வது கூடாது என முஸ்லிம்கள் கூறுவதும் இந்த நம்பிக்கையை ஒத்ததாகும்.

## ஹஜ்ஜின் வகைகள்



**தமத்து.ஃ.** ஹஜ்ஜுடைய மாதம் ஒன்றில் எல்லையில் இஹ்ராம் அணியும் ஒருவர் اللهُمَّ لَبَّيْكَ عُمْرَةً என்ற தல்பியாவுடன் உம்ராவிற்காக மாத்திரம் நிய்யத் செய்து, தவாபை முடித்து, பின் "ஸஃய்" (தொங்கோட்டம் ஓடுதல்) ஆகிய கடமைகளை முடித்து தலை முடியையும் மழித்து, இஹ்ராத்தையும் களைந்து, சாதாரண நிலைக்கு வருவதாகும். பின்னர் துல்ஹஜ் பிறை எட்டில் ஹஜ்ஜுக்காக மீண்டும் நிய்யத் செய்து, தனது **ஹஜ்** கடமையை தொடரும் வழிமுறைக்கு ஹஜ் தமத்து.ஃ. எனக் கூறப்படும்.

ஒருவர் கட்டுப்பாடுகள் இன்றி, சுதந்திரமாக தனது இயல்பான நிலையில் செயல்படுவதை குறிக்கப் பயன்படுத்தப்படும் **'தமத்து.ஃ."** என்ற சொல் இங்கு பிரயோகிக்கப்பட்டுள்ளது.

சுருக்கமாகக் கூறினால் தமத்து.ஃ. என்பது ஹஜ் மாதத்தில் மாதத்தில் ஒருவர் உம்ரா செய்து, துல் ஹஜ்மாதம் எட்டாம் நாள் மீண்டும் ஹஜ்ஜிற்காக நிய்யத் செய்து ஹஜ் கிரிகைளைத் தொடர்தல் எனக் குறிப்பிட முடியும்.

**கிரான்:** எல்லையில் இஹ்ராம் அணியும் ஒருவர் ஹஜ், உம்ராவை சேர்த்து செய்வதாக நிய்யத் செய்து, اللهُمَّ لَبَّيْكَ حَجًّا وَ عُمْرَةً என்ற தல்பியாவுடன **தவா.ஃ.ப்,** ஸ.ஃ.ய் (தொங்கோட்டம் ஓடுதல்) ஆகிய கடமைகளை முடித்த பின், தலையையும் மழிக்காது, இஹ்ராத்தையும் களையாது தனது ஹஜ் கடமையை தொடர்வதோடு, துல்**ஹஜ்** பிறை பத்திலுள்ள கடமைகளை முடித்த பின்னர் இயல்பான நிலைக்கு வருவதாகும். ஹஜ்ஜும், உம்ராவும் இணைத்து செய்யப்படுவதால் இது "கிரான்" என அழைக்கப்படுகின்றது.

**இ.ஃ.ப்ராத்** : ஒருவர் ஹஜ்ஜுக்காக மாத்திரம் நிய்யத் செய்து, اللهُمَّ لَبَّيْكَ حَجًّا என தல்பியாக் கூறி தனது கடமையை ஆரம்பிப்பதாகும். **தவா.ஃ.ப்,** மற்றும் ஸ.ஃ.ய் (தொங்கோட்டம் ஓடுதல்) ஆகிய கடமைகளை முடித்து,

தலையையும் மழிக்காது, இஹ்ராத்தையும் களையாது ஹஜ்ஜுடன் தொடர்பான கடமைகளை மாத்திரம் செய்வதால் இது **“இ.்.ப்ராத்”** எனக் கூறப்படுகின்றது. இதில் பலிப்பராணி கொடுப்பது கடமை இல்லை. **இவ்வகைகள் பற்றி பின்வரும் நபி மொழி உறுதி செய்கின்றது.**

**عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ خَرَجْنَا مَعَ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ مَنْ أَرَادَ مِنْكُمْ أَنْ يُهِلَّ بِحَجٍّ وَعُمْرَةٍ فَلْيَفْعَلْ وَمَنْ أَرَادَ أَنْ يُهِلَّ بِحَجٍّ فَلْيُهِلَّ وَمَنْ أَرَادَ أَنْ يُهِلَّ بِعُمْرَةٍ فَلْيُهِلَّ (متفق عليه)**

நபி (ﷺ) அவர்களுடன் ஹஜ்ஜுக்காக நாம் புறப்பட்டுச் சென்றோம். உங்களில் யார் ஹஜ்ஜுக்காகவும், உம்ராவிற்காகவும் (இஹ்ராம் அணிந்து) தல்பியா கூற விரும்புகிறாரே அவர் அவ்வாறு செய்து கொள்ளட்டும். அதே நேரம் யார் ஹஜ்ஜுக்காக மாத்திரம் (இஹ்ராம் அணிந்து) தல்பியா கூற விரும்புகிறாரே அவரும் அவ்வாறு செய்து கொள்ளவும், உம்ராவிற்காக மாத்திரம் யார் (இஹ்ராம் அணிந்து) தல்பியா கூற விரும்புகிறரோ அவர் அவ்வாறு செய்து கொள்ளட்டும். என நபி (ﷺ) அவர்கள் கூறியதாக அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (புகாரி, முஸ்லிம்).

**இவைகளுக்கு மத்தியில் காணப்படும் வேறுபாடுகள்**

**“கிரான்”** முறைப்படி செய்பவர் ஹஜ்ஜுக்காகவும், உம்ராவிற்காகவும் சேர்த்து நிய்யத் செய்த காரணத்தால் அவர் (தா.்.புல் குதூா முடன்) முதல் தவா.்.புடன் செய்த ஸ.்.ய் ஹஜ்ஜுக்காக போதுமானதாகும். இதே வழிமுறையை ***இ.்.ப்ராத்*** முறைப்படி ஹஜ் செய்தவரும் கடைப்பிடிப்பார்.

இவர்கள் இருவரும் பிறை பத்தில் மற்றொரு ***“தவா.்.ப்”*** செய்ய வேண்டும். ஸ.்.ய் ஏற்கெனவே செய்துள்ளதால் மீண்டும் ஸ.்.ய் செய்ய வேண்டிய கடமை இல்லை. இந்த தவா.்.ப் **“தவாபுல் இபாழா”** எனப்படும். இவர்கள் இருவருக்கும் தவா.்.புல் குதூம் தவறிவிடுமானால் அதில் தவறில்லை.

இதற்கு ஆதாரமாக உர்வா பின் முளர்ரிஸ் (ரழி) அவர்களின் செய்தியை ஆதாரமாகக் கொள்ளலாம் என உஸைமீன் (ரஹ்) அவர்கள் ஷரஹுல் மும்தி.். என்ற நூலில் குறிப்பிடுகின்றார்கள்.

அதே நேரம், **“தமத்து.ஃ.”** முறையில் “ஹஜ்” செய்தவர் ஆரம்ப தவா.ஃ.புடன் செய்த **“ஸ.ஃ.ய்” அவரது** உம்ராவிற்கான ஸ.ஃ.யாக கொள்ளப்படும். அதனால் அவர் பிறை பத்தில் தவா.ஃ.புல் இ.ஃ.பாழாவுடன், ஸ.ஃ.யும் செய்ய வேண்டும். இவர் பலிப்பராணி (குர்பானி) கொடுப்பது கடமையாகும்.

அதே போன்று, கிரான் அடிப்படையில் செய்தவரும் **ஹத்ய்** என்ற பலிப்பிராணி கொடுப்பது கடமையாகும்.

**குறிப்பு:** இந்தியா, இலங்கை போன்ற **நாடுகளில் இருந்து ஹஜ் செய்வோர் தமத்து.ஃ. முறையை அதிகம் பேணுவர். அதுவே சிறந்த முறையுமாகும். அதனால் அது பற்றி விரிவாக தரப்படும்.**

## இஹ்ராம் அணிவதற்கு முன் செய்யவேண்டிய காரியங்கள்.

**குளிப்பு:** மாதத்தீட்டு, பிரசவத் தீட்டு போன்ற உபாதைகளால் குளிப்பு கடமையான பெண்கள், உடலுறவு உறக்கம் போன்றவற்றால் குளிப்புக் கடமையான ஆண், பெண் அனைவரும் குளிப்பது கடமையாகும். குளிப்புக் கடமையில்லாத மற்றவர்கள் விரும்பினால் குளிக்கலாம். விரும்பாவிட்டால் குளிக்காது விட்டுவிடலாம்.

## மனதால் நிய்யத் செய்து தல்பியாவுடன் இஹ்ராத்தில் நுழைதல்

இஸ்லாத்தின் சகல அமல்களுக்கும் உள்ளத்துடன் தொடர்பு இருப்பது போன்று **ஹஜ்**, உம்ராவிற்கும் தொடர்பு இருக்கிறது. எல்லையை அடைந்ததும் உம்ராவிற்கான எண்ணத்தை மனதில் இருத்தி, **“அல்லாஹும்ம லெப்பை(க்)க உம்ரதன்” اَللّٰهُـمَّ لَبَّيْـكَ عُمْـرَةً** அல்லாஹ்வே! **உனக்காக உம்ராவை நிறைவேற்றுகிறேன்”** என வெளிப்படையாகக் கூறிக் கொள்ளல். இது தல்பியாவைக் கொண்டு ஆரம்பித்தல் என்று கூறப்படும்.

## பயணம் தடைப்படுவதை அஞ்சினால்...

உம்ராப் பயணம் செல்லும் போது சில தடங்கல்கள் ஏற்பட்டு, அதனால் உம்ராவை நிறைவு செய்ய முடியாது போகும் என்ற நிலை ஏற்படுவதை ஒருவர் அஞ்சினால் அவர் உம்ராவிற்கான நிய்யத் செய்யும் போது

**"அல்லாஹும்ம** اللَّهُمَّ إِنْ حَبَسَنِيْ حَابِسٌ فَمَحِلِّي حَيْثُ حَبَسْتَنِي

**இன்ஹ(B)பஸனீ ஹா(B)பிஸுன் (F)ப மஹில்லீ ஹைது ஹ (B)பஸ்தனீ**

**பொருள்: "அல்லாஹ்வே! எனது பயணத்தில் ஏதாவது தடங்கள் ஏற்பட்டால் அதுவே எனது (இஹ்ராத்தைக் களையும்) இடமாகும். (முஸ்லிம்)** என மனதால் நினைத்துக் கொள்ளல்.

### இவ்வாறு செய்வதால்... ?

இவ்வாறு ஒருவருக்கு தடங்கல் ஏற்படும் இடத்தில் முடியை மழித்து, அல்லது குறைத்துக் கொள்ளலாம். இவர் **"ஹத்ய்"** எனப்படும் பலிப்பிராணியை பலி கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. ஹஜ், அல்லது உம்ராவை மறுமுறை **"களா" ச்** செய்ய வேண்டும்.

அவ்வாறு கூறாத ஒருவருக்கு தடங்கல் ஏற்பட்டு, இஹ்ராத்தை களைய வேண்டிய நிலை ஏற்பட்டால் அவர் நபி (ﷺ) அவர்களும், நபித்தோழர்களும் **"ஹுதைபியா"** உடன்படிக்கை ஆண்டில் பலிப்பிராணியை கொடுத்து, தமது தலைகளை மழித்து, பின் இஹ்ராத்தை கழைந்தது போன்று செய்ய வேண்டும். முடியுமாயின் உம்ராவை மறு ஆண்டு "கழா"ச் செய்தது போன்று கழாவும் செய்ய வேண்டும்.

### பிரசவம் மாதவிடாய், ஏற்பட்ட பெண்களின் இஹ்ராம் செல்லுபடியானதாகும்.

பெண்கள் பிரசவித்த பின்னால் இஹ்ராம் அணிந்து தல்பியாக் கூறுவதோ, அல்லது மாதவிடாயுடன் இஹ்ராம் அணிந்து தல்பியாக் கூறுவதோ மார்க்கம் அனுமதித்த காரியமாகும்.

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا قَالَتْ نُفِسَتْ أَسْمَاءُ بِنْتُ عُمَيْسٍ بِمُحَمَّدِ بْنِ أَبِي بَكْرٍ بِالشَّجَرَةِ فَأَمَرَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَبَا بَكْرٍ يَأْمُرُهَا أَنْ تَغْتَسِلَ وَتُهِلّ (صحيح مسلم )

*அபூபக்கர் (ﷺ) அவர்களின் மனைவி அஸ்மா பின்த் உமைஸ் (ரழி) அவர்கள் (துல்குலை.்.பா) மரத்தடியில் முஹம்மத் பின் அபூபக்ரைப் பிரசவித்த போது அபூபக்கர் (ரழி) அவர்களிடம் அவரைக் குளித்து, பின்பு தல்பியாக் கூறிக் கொள்ளும்படி நபி (ﷺ) அவர்கள் கட்டளையிட்டிருந்தார்கள். (முஸ்லிம்)* இது மாதவிடாய் ஏற்பட்ட பெண்ணுக்கும் பொருந்தும் சட்டமாகும்.

وَفِيهِ : صِحَّة إِحْرَام النُّفَسَاء وَالْحَائِض ، وَاسْتِحْبَاب اِغْتِسَالهمَا لِلْإِحْرَامِ ، وَهُوَ مُجْمَع عَلَى الْأَمْر بِهِ (شرح النووي على مسلم)

பிரசவத் தீட்டு ஏற்பட்ட பெண்கள், மாதவிடாய்ப் பெண்கள் ஆகியோரின் இஹ்ராம் செல்லுபடியாகும் என்பதும், அவ்விருவரும் இஹ்ராத்திற்காக குளித்துக் கொள்வது சுன்னத் என்பதும் இந்த ஹதீஸில் உள்ளடங்கி இருக்கின்றது. இதகளில் அறிஞர் ஒருமித்த கருத்தில் உள்ளனர் என இமாம் நவவி (ரஹ்) அவர்கள் சுட்டிக்காட்டுவதை இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும்.

**மாதத் தீட்டு ஏற்பட்ட பெண்கள், பிரசவத் தீட்டு ஏற்பட்ட பெண்கள் ஆகியோர் எவ்வாறு இஹ்ராத்தில் நுழைய வேண்டும்** என்ற பாடத்தலைப் பின் ஊடாகவும் இதன் விபரம் பற்றி அறியலாம்.

மாதவிடாய் ஏற்பட்ட பெண்களின் இஹ்ராம் அணிந்து ஹஜ் உம்ராவிற்காக செல்லமுடியும் என்பதை பின்வரும் நிகழ்வின் ஊடாக அறிந்து கொள்ள முடிகின்றது.

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ دَخَلَ عَلَيْهَا وَحَاضَتْ بِسَرِفَ قَبْلَ أَنْ تَدْخُلَ مَكَّةَ وَهِيَ تَبْكِي فَقَالَ مَا لَكِ أَنَفِسْتِ قَالَتْ نَعَمْ قَالَ إِنَّ هَذَا أَمْرٌ كَتَبَهُ اللَّهُ عَلَى بَنَاتِ آدَمَ فَاقْضِي مَا يَقْضِي الْحَاجُّ غَيْرَ أَنْ لَا تَطُوفِي بِالْبَيْتِ صحيح البخاري

ஸரி.ஃ.ப் என்ற இடத்தை **(தற்போதைய நவாரிய்யாவை)** அடைந்த போது மக்காவிற்குள் நுழையும் முன்னதாக அன்னை ஆயிஷா (ரழி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டது. அழுதவர்களாக நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். என்ன உனக்கு நேர்ந்தது? உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா எனக் கேட்டார்கள். அவர்கள் ஆம் என்றதும், இது அல்லாஹ் ஆதம் நபியின் பெண் பிள்ளைகள் மீது விதித்ததாச்சே! எனக் கூறிவிட்டு ஹாஜிகள் செய்கின்ற அனைத்தையும் நீ செய்து கொள். ஆனால் கா.ஃ.பாவை தவா.ஃ.ப் செய்யாதே எனக் கூறினார்கள் (புகாரி) புகாரியின் மற்றொரு அறிவிப்பில்: நீ பரிசுத்தமாகின்ற வரை என இடம் பெற்றுள்ளது.

இதன் மூலம் குளிப்புக் கடமையான நிலையில் ஒருவர் இஹ்ராம் அணிந்து செல்வது ஆகுமானது என்பதைக் காட்டுகின்றது. இருப்பினும் மாதவிடாய், மற்றும் பிரசவத்தீட்டு போன்ற காரணங்களால் தவா.ஃ.ப் செய்யலாகாது. ஸ.ஃ.ய் செய்யலாம். இருப்பினும் விடுபட்ட தவா.ஃ.புடன் ஸ.ஃ.ய் செய்து கொள்வது ஏற்றமானதாகும்.

**இஹ்ராத்திற்கென தனியான சுன்னத் தொழுகை இல்லை.**

இஹ்ராத்திற்கென ஒரு தொழுகையை நபி (ﷺ) அவர்கள் அறிமுகம் செய்யவில்லை என்பதாலும், ஒரு வணக்கத்தை நாமாக கண்டுபிடிக்க முடியாது என்பதாலும் இஹ்ராத்திற்கென விஷேட தொழுகை ஏதும் இல்லை என்பதாலும் இஹ்ராத்திற்கென ஒரு தொழுகையைத் தொழக் கூடாது. சிலர் ஹஜ்ஜுக்கு வழி அனுப்புவோரை பாங்கு கூறி வழி அனுப்புகின்றனர். இதுவும் மார்க்கத்தில் இல்லாத புதிய வழிமுறையாகும்.

தொழுவதால், பாங்கு சொல்வதால் என்ன பிரச்சினை நன்மைதானே என நாமாக முடிவு செய்யும் அதிகாரம் நமக்கில்லை.

444 – حَدَّثَنَا قَبِيصَةُ أَخْبَرَنَا سُفْيَانُ عَنْ أَبِى رَبَاحٍ – شَيْخٌ مِنْ آلِ عُمَرَ – قَالَ : رَأَى سَعِيدُ بْنُ الْمُسَيَّبِ رَجُلاً يُصَلِّى بَعْدَ الْعَصْرِ الرَّكْعَتَيْنِ يُكْثِرُ فَقَالَ لَهُ. فَقَالَ : يَا أَبَا مُحَمَّدٍ أَيُعَذِّبُنِى اللَّهُ عَلَى الصَّلاَةِ؟ قَالَ : لاَ وَلَكِنْ يُعَذِّبُكَ اللَّهُ بِخِلاَفِ السُّنَّةِ. (سنن الدارمي –/ المكتبة الشاملة)

ஸயீத் பின் முஸய்யப் (ரஹ்) என்ற தாபியீ அவர்கள் அஸருக்குப் பின்னால் இரண்டு ரகஅத்துக்களுக்கும் அதிகமாக தொழுதுவரும் மனிதர் ஒருவரைக் அவதானித்தார்கள். அவரிடம் (கூற வேண்டியதைக்) கூறினார்கள். அதற்கவர், அபூ முஹம்மத் அவர்களே! தொழுதமைக்காக அல்லாஹ் என்னை தண்டிப்பானா? எனக் கேட்டார். அதற்கு அவர்கள், இல்லை. எனினும் நீ ***சுன்னா (நபிவழிக்கு)*** முரணாக செய்வதற்காக உன்னை அல்லாஹ் தண்டிப்பான் எனக் கூறினார்கள். (ஆதாரம்: தாரமி)

வணக்க வழபாடுகளை நாமாக கண்டுபிடிக்க முடியாது என்பதை இந்த அறிஞரின் கூற்றில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

## மதீனாவின் எல்லை வழியாகச் செல்வோரின் தொழுகை

மதீனாவின் எல்லையிலுள்ள ***"துல்ஹுலை.்.பா"*** பள்ளிவாசல் **"வாதில் அகீக்"** எனும் புனித பள்ளத்தாக்கில் அமைந்துள்ளது. நபிகள் (ﷺ) அவர்கள் ஹஜ்ஜுக்காக அவ்விடத்தில் நிய்யத் செய்து அதைக் கடக்க முற்பட்ட போது வானவர் ஜிப்ரீல் (அலை) வந்து, صَلِّ فِي هَذَا الْوَادِي الْمُبَارَكِ (صحيح البخاري)

**"இந்தப் புனித ஓடையில் தொழுவீராக"** எனக் கூறினார்கள். (புகாரி). என்ற ஹதீஸை அடிப்படையாகக் கொண்டு மதீனாவின் எல்லையில் இருந்து **"இஹ்ராம்"** அணியும் ஒருவர் "துல்ஹுலை.்.பா" பள்ளியில் இரண்டு ரகஅத்துக்கள் தொழ வேண்டும். வேறு எல்லையில் இருந்து செல்வோர் இந்த இரு ரகஅத்துக்களையும் தொழ வேண்டியதில்லை.

மதீனா எல்லைக்கென குறித்த சிறப்புடன் வந்துள்ள ஹதீஸை அனைத்து எல்லைக்கும் பொதுவான ஹதீஸாகக் கொள்ளவும் முடியாது

## தல்பியாக் கூறுதல்

நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் "ஹஜ்" உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து நிய்யத் வைத்து ஒட்டகத்தில் அமர்ந்த பின்னர் பின்வருமாறு தல்பியாக் கூறுவார்கள். இதை தனித்தனியே சப்தத்தை உயர்த்தி கூறவேண்டும். இது ஹரம் செல்லும் வரை தொடர வேண்டும்.

لَبَّيْكَ اللَّهُمَّ لَبَّيْكَ لَبَّيْكَ لَا شَرِيكَ لَكَ لَبَّيْكَ إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَا شَرِيكَ لَكَ

**உச்சரிப்பு:- "லெப்பைக், அல்லாஹும்ம லெப்பைக், லெப்பைக் லாஷரீக்க லக, லெப்பைக், இன்னல் ஹம்த, வன்னி.:.மத லக, வல்முல்க். லாஷரீகலக்.** (புகாரி, முஸ்லிம்).

**பொருள்:** *அல்லாஹ்வே! உனது அழைப்புக்கு விடை கொடுத்து, உன்னை மென்மேலும் வழிப்பட்டுவிட்டேன். அல்லாஹ்வே! உனது அழைப்புக்கு விடை கொடுத்து, உன்னை முழுமையாக வழிப்பட்டுவிட்டேன். உனக்கு எந்த இணையாளரும் கிடையாது. புகழும், அருளும், ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு எந்த இணையாளரும் கிடையாது.*

### தல்பியாக் கூறுவதன் அவசியம்

عنْ خَلَّادِ بْنِ السَّائِبِ عَنْ أَبِيهِ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ جَاءَنِي جِبْرِيلُ فَقَالَ لِي يَا مُحَمَّدُ مُرْ أَصْحَابَكَ أَنْ يَرْفَعُوا أَصْوَاتَهُمْ بِالتَّلْبِيَةِ (سنن أبي داود، والنسائي)

ஜிப்ரீல் (عليه السلام) அவர்கள் என்னிடம் வந்து முஹம்மதே! தல்பியாவால் சப்தத்தை உயர்த்தும்படி உமது தோழர்களுக்கு பணிப்பீராக! எனக் கூறினார்கள் என நபி (ﷺ) அவர்கள் கூறியதை கல்லாத் பின் ஸாயித் (ரஹ்) அவர்கள் தனது தந்தை ஸாயிப் (رضي الله عنه) அவர்கள் வழியாக அறிவிக்கிறார்கள். (அபூதாவூத், நஸயி).

மேற் கூறப்பட்ட ஹதீஸில் கூறப்பட்டிருப்பது போன்று தல்பியாவின் அவசியத்தை உணர்ந்து, நாமும் அதனை தனித்தனியே உரத்த குரலில் கூற வேண்டும்.

## தல்பியாவின் சிறப்பு:

عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَا مِنْ مُسْلِمٍ يُلَبِّي إِلَّا لَبَّى مَنْ عَنْ يَمِينِهِ أَوْ عَنْ شِمَالِهِ مِنْ حَجَرٍ أَوْ شَجَرٍ أَوْ مَدَرٍ حَتَّى تَنْقَطِعَ الْأَرْضُ مِنْ هَاهُنَا وَهَاهُنَا (رواه الترمذي)

"தல்பிய்யாக் கூறும் முஸ்லிமின் வலது, மற்றும் இடது புறங்களில் காணப்படும் கற்கள், மரங்கள், மண் இங்கும் அங்குமாக பூமி முடிவடையும் வரை தல்பியாக் கூறுகின்றன" என நபி (ﷺ) அவர்கள் கூறினார்கள். (திர்மிதி, இப்னுமாஜா).

**இஹ்ராம் அணிந்த நிலையில் தடுக்கப்பட்டவை.**

1) தலைமுடியை மழித்தல், அல்லது குறைத்தல். (நகமும் இத்தோடு இணைக்கப்படுகின்றது.
2) ஆண்கள் தலையை மூடுதல்.
3) ஆண்கள் சேட், ட்ரவ்ஸர், அண்டர்வெயார், பெனியன் போன்ற தைக்கப்பட்ட ஆடைகளை அணிதல்.
4) இஹ்ராமுடைய நிலையில் ஆடையில், அல்லது உடலில் மணம் பூசுதல். **குறிப்பு:** இஹ்ராம் அணியும் முன்னர் உடம்பில் பூசப்பட்ட வாசனையின் வாடை உடம்பில் காணப்படுவது குற்றமல்ல.
5) தரைவாழ் மிருகங்களைக் கொல்லுதல், அல்லது வேட்டையாடுதல்
6) திருமண ஒப்பந்தம் செய்தல்.
7) பெண்கள் முகத்தை மறைத்தல், அல்லது இரு மணிக்கட்டுகளுக்கும் கையுறை அணிதல்.
8) ஹஜ், உம்ராக் கடமை முடியுமுன் இல்லற உறவில் ஈடுபடுதல்.
9) காலுறைகள் அணிதல்.

10) மனைவயியைக் கட்டியணைப்பதால், அல்லது சுயஇன்பம் பெறுவதால் இந்திரியம் வெளியேறுதல்.

## குறிப்புக்கள்:

1) கைக்கடிகாரம் (வொச்), இடுப்பு வார், (பெல்ட்) போன்றவற்றில் தையல் இருந்தாலும் அவற்றை அணிந்து கொள்ளலாம்.

2) பாதணிகள் இல்லாதவர்கள் “காலுறை” (மேஸ்) ஐ அதன் நீளத்தை நறுக்கிய பின் அணிய முடியும்.

3) **இஹ்ராத்துடன் இருக்கும்** ஒரு பெண் அவளது முகத்தை மூடுவதையும்,, இருமணிக்கட்டுகளையும் கையுறைகளால் மறைப்பதையும் தவிர்க்க வேண்டும்.

இஹ்ராத்தின் போது மார்க்கம் பிரத்தியேகமாக அவளுக்கென விதித்த சட்டங்களை ஆண்களைப் போன்று பேண வேண்டும்.

இஹ்ராத்துக்கு அப்பால் வற்புறுத்தியுள்ள கடமைகளை இஹ்ராத்தின் போது செய்வது தடையாக இல்லை எனில் அவற்றையும் பேணி நடக்க வேண்டும்.

4) ஒரு பெண் இஹ்ராம் அணிந்த பின்னால் “மாதவிடாய்” ஏற்பட்டால் தவா.்.ப், மற்றும் ஸ.்.ய் செய்வது கூடாது. ஹாஜிகள் செய்கின்ற ஏனைய எல்லாக் கடமைகளையும செய்யலாம்.

5) ஆணோ, பெண்ணோ இஹ்ராம் அணிந்து பயணிக்கின்ற போது உறக்கம் உஷ்ணம் போன்ற காரணிகளால் குளிப்பு கடமையானவர்களாகி விட்டால் குளித்த பின்பே அவர்கள் தவா.்.ப் செய்ய வேண்டும்.

6) மக்களுக்கு தீங்கிளைக்கும் தேள், பாம்பு, எலி, காகம், விசர் நாய், பருந்து போன்ற விலங்குகளைக் கொல்லலாம்.

7) இஹ்ராத்தின் போது பெண்களுக்கென தனியான ஆடை அமைப்புக் கிடையாது.

(8) இஹ்ராத்தின் போது தடுக்கப்பட்டவைகளைச் செய்வதற்குரிய ***-ஃபித்யா-*** குற்றப் பரிகாரம் சமமானவை அல்ல. மாற்றமாக, ஒன்றுக்கொன்று வேறுபட்டதாகும்.

(9) ஒருவர் அறியாத நிலையில் அல்லது மறதியாகச் செய்கின்ற காரியங்கள் குற்றப்பரிகாரம் என்ற சட்டத்தின் கீழ் உள்ளடக்கப்படாது மறதி, தவறு, அறியாமை போன்ற காரணங்களின் அடிப்படையில் மன்னிப்பின் கீழ் உள்ளடக்கப்படுவதே அறிஞர்களின் பார்வையாகும்.

## கஃபாவை வந்தடைந்ததும்

கஃபாவை முதலாவதாகக் காணுகின்ற போது கேட்கும் பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்படும் என்ற செய்தியும், கஃபாவைக் கண்டதும் ஓதும் பிரார‌த்தனையும் ஆதாரத்திற்கு கொள்ள முடியாத செய்திகளாகும்.
ஆதாரமற்ற செய்திகளை வணக்கமாக்கி வழிபடுவதை ஒரு முஃமின் தவிர்க்க வேண்டும்.

**கஃபாவை வந்தடைந்ததும்**

கஃபாவை வந்தடைந்ததும் **தல்பியாவை** நிறுத்தி விட்டு, பொதுவாக பள்ளிவாசல்களில் பிரவேசிக்கும் ஒழுங்கைப் பேணியவாறு, உழுவுடன் கஃபா நோக்கிச் செல்ல வேண்டும்.
பின்பு ஹஜருல் அஸ்வத் கல்லை நேரடியாக முத்தமிடுதல். அல்லது வலது கரத்தினால் தொட்டு முத்தமிட்டு அக்கரத்தை முத்தமிடுதல். ஒரு தடியினால் முத்தமிட்டு அதை முத்தமிட்டுக் கொள்ளல். அதைத் தொடர்ந்து **அல்லாஹு அக்பர்** என்று கூறியவாறு தவாஃபை ஆரம்பித்தல்.
நபி (ﷺ) அவர்கள் அவ்வாறே செய்துள்ளார்கள். இஹ்ராம் அணிந்த நிலையில் ***<u>தஹிய்யதுல் மஸ்ஜித்</u>*** தொழ வேண்டிய அவசியம் இல்லை.

**பிரவேசம்: வரலாற்றில் பாபு பனீ அப்தி மானாஃப் என்றும், பாபு பனீ ஷைபா என்றும்** ((தற்போது பாபுஸ் ஸலாம்)) என்றும் அறியப்படும் வாயில் வழியாக நபி (ﷺ) அவர்கள் வசதிக்காக நுழைந்துள்ளார்களே அன்றி மார்க்கமாக நுழையவில்லை என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

**பாபுஸ்ஸலாம்** வழியாக நுழைவது சுன்னத் என்பது குறித்த ஒரு மத்ஹபின் கருத்தே அன்றி முழு அறிஞர்களின் முடிவு அல்ல.

ஹஜ் தொடர்பாக ஜாபிர் (ரழி) அவர்கள் அறிவிக்கும் நீண்ட ஹதீஸில் இது இடம் பெறவில்லை என்பது இதன் மற்றொரு காரணமாகும்.

இருப்பினும் இதன் வழியாக நுழைவது சிறப்பைக் குறிப்பதாகக் கொள்ளப்படும் **என்று அறிஞர்களால் சுட்டிக்காட்டப்படுகின்றது.**




## தவா.்.ப் செய்யும் முறை

ஆண்கள் தமது மேல் "இஹ்ராம்" ஆடையை வலது தோளின் கீழால் எடுத்து, இடது தோளின் மேல் போட்டுக் கொள்ள வேண்டும். **இதற்கு இள்திபா.். என்று கூறப்படும். பின்னர்,** க.்.பாவின் வலது பக்க மூலையில் அமைந்திருக்கும் **"ஹஜருல் அஸ்வத்"** கறுப்புக் கல்லில் இருந்து **"அல்லாஹு அக்பர்"** எனக் கூறியவராக ஏழு முறை தவா.்.ப் செய்ய வேண்டும்.

இதில் ஏழு தடவையும் வலது தோள் திறந்திருப்பதுடன், முதல் மூன்று சுற்றில் **"ரம்ல்"** (ஓட்டமும், நடையும் அற்ற) வேகமான நடை சுன்னத்தாகும். இவ்வேளை ஹஜருல் அஸ்வதிற்கு நேராக இருக்கும் **"ருக்னுல் யமானி"** க.்.பாவின் வலது(கோனர்) மூலையை முத்தமிடாது, கையினால் தொடுவடன்

رَبَّنَـا آتِنَـا فِـي الـدُّنْيَا حَسَـنَةً وَفِـي الْآخِـرَةِ حَسَـنَةً وَقِنَـا عَـذَابَ النَّـارِ

“ர(**B**)ப்பனா ஆதினா (F)பித்துன்யா ஹஸனதன், வ(F)பில் ஆஹிர(த்)தி ஹஸனதன், வகினா அதா(B)பன்னார்.

**பொருள்:** எங்கள் இரட்சகனே! இம்மையிலும், மறுமையிலும் எமக்கு நல்லதை வழங்குவாயாக! நரக நெருப்பிலிருந்து எம்மைப் பாதுகாப்பாயாக! எனக் கூறி பிரார்த்தித்தல்.

***குறிப்பு: எந்த தவாபை அடுத்து ஸ.்.ய் இடம் பெறுமோ அதில் மாத்தரிமே ரம்ல் முறை என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.***

## மற்றவர் உதவியுடன் தவா.்.ப் செய்யலாம்.

காலால் தவா.்.ப் செய்ய முடியாத நிலையிலுள்ள நோயாளிகள், வயோதிபர்கள், உடல் தொப்பையானவர்கள் ஒருவரின் தோழ்மீதிருந்தவாறோ, அல்லது மக்கா ஹரத்தினுள் பல்லக்குகளைச் சுமப்பவர்களின் உதவியுடனோ தவாப் செய்யலாம்.

நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் ஒட்டகத்தின் மீதிருந்தவாறு தவா.்.ப் செய்துள்ளதை வைத்து இதைப் புரிந்து கொள்ளலாம்.

### க.்.பாவின் பின்வரும் படத்தை அவதானிக்கவும்



## மகாமு இப்ராஹீம்

## குறிப்புக்கள்

1) தவா.்.பின் எண்ணிக்கையில் ஆறா? அல்லது ஏழா ? என்ற சந்தேகம் ஏற்பட்டால் குறைவான அளவை (ஆறு என) முடிவு செய்து, மீதியைப் பூர்த்தி செய்தல்.

(2) “ஹஜருல் அஸ்வத்” கல்லை கையினால் தொட்டு, நேரடியாக முத்தமிட முடியுமானால் முத்தமிடல். அல்லது வலது கையினால் தொட்டு கையை முத்தமிடுதல். அல்லது ஒரு கம்பினால் தொட்டு பின் அந்தக் கம்பை முத்தமிடுதல். முடியாத போது கையினால் சைகை செய்தல், அதை முத்தமிட வேண்டியதில்லை.

3) ஒவ்வொரு சுற்றிலும் “ஹஜருல் அஸ்வதிற்கு” நேராக நின்று “அல்லாஹு அக்பர்” எனக் கூறுதல்.

4) “ஹிஜ்ர்” (கட்டப்படாத வளைவு) க.்.பாவின் ஒரு பகுதியாகும். எனவே “ஹிஜ்ர்” க்கு வெளியால் க.்.பாவை முழுமையாக சுற்றுதல்.

5) ஹஜருல் அஸ்வதிற்கு நேராக இருக்கும் (ருக்னுல் யமானி) வலது மூலையை தொடுவது சுன்னத்தாகும். ஆனால் தொட்ட கையை முத்தமிடுவதோ, அல்லது அதைத் தொட முடியாத போது சைகை செய்வதோ மார்க்கமல்ல.

6) ஒவ்வொரு தவா.்.பிற்குமென குறிப்பிட்டதோர் பிரார்த்தனை கிடையாது.

7) அன்னிய பெண்கள் படுவதால் உழு முறிவதில்லை. அதற்காக ஒருவர் ஹன.்.பி மத்ஹபிற்கு மாற வேண்டிய அவசியமும் இல்லை.

நபி (ﷺ) அவர்கள் பெண்கள் படுவதால் உழு முறியும் எனக் கூறவுமில்லை. அவர்களின் காலத்தில் இவ்வாறானதொரு மத்ஹப் இருந்து, அவர்கள் அதற்கு மாறவும் இல்லை.

8) தாவா.ஃ.பில் **இள்திபா.ஃ.** (தோள் துறக்கும்) முறை க.ஃ.பாவை அடைந்து, ஆரம்பாமாக செய்யப்படும் தவா.ஃ.பிற்கு மாத்திரம் உரியதாகும்.

9)க.ஃ.பாவின் கட்டடத்தையோ, அதன் மீது போர்த்தப்பட்டுள்ள புடைவையையோ வணக்கமாகவும், பரகத் வேண்டியும் தொட்டுப்பார்த்தல் கூடாது என்பதை பின்வரும் நிகழ்ச்சியின் மூலம் அறியலாம்.

**عن ابن عباس : انه طاف مع معاوية بالبيت فجعل معاوية يستلم الأركان كلها فقال له بن عباس لم تستلم هذين الركنين ولم يكن رسول الله صلى الله عليه وسلم يستلمهما فقال معاوية ليس شيء من البيت مهجورا فقال بن عباس { لقد كان لكم في رسول الله أسوة حسنة } فقال معاوية صدقت ((مسند أحمد ))**

முஆவியா (ﷺ) அவர்களுடன் இப்னு அப்பாஸ் (ﷺ) அவர்கள் ஒரு முறை தவா.ஃ.ப் செய்தார்கள். அப்போது முஆவியா (ﷺ) அவர்கள் க.ஃ.பாவின் எல்லா மூலைகளையும் தொட்டார்கள். இதனை அவதானித்த இப்னு அப்பாஸ் (ﷺ) அவர்கள் (மேலதிகமாக) இவ்விரண்டு மூலைகளையும் ஏன் தொட்டீர் என வினவினார்கள். அதற்கு அல்லாஹ்வின் இல்லத்தில் எதுவும் வெறுக்கப்பட்டதல்லவே என முஆவியா (ﷺ) அவர்கள் கூற, உடனே இப்னு அப்பாஸ் (ﷺ) அவர்கள் “உங்களுக்கு உங்களின் தூதரிடம் முன்மாதிரி இருக்கிறது” என்ற திருமறை வசனத்தை ஓதிக்காட்டினார்கள். உடனே (தனது நிலைப்பாட்டை திருத்திக் கொண்ட) முஆவியா (ﷺ) அவர்கள், “நீர் உண்மை உரைத்தீர்” எனக் கூறினார்கள். (ஆதாரம்: அஹ்மத்)

## ஆண்கள் பட்டால்... கணவன் தொட்டுவிட்டால் ...

பெண்கள் வுழு செய்த பின் கணவரோ, மற்ற அந்நிய ஆண்களோ அறிந்தோ அறியாமலோ படுவதால் ஷாபி மத்ஹபில் இருப்பதாகக் கூறுவோர் உழுமுறிந்திவிடுவதாக நம்பி, மீண்டும் வுழு செய்வதைப் பார்க்கின்றோம். உழு செய்துவிட்டால் பெண்களிடம் கணவன் தீண்டத்தகாதவராகிவிடுகின்றார். ஒருவர் மற்றவரை விட்டும் ஓதுங்கிக் கொள்கின்றனர்.

நபி (ﷺ) அவர்கள் தமது மனைவியரில் சிலரை முத்தமிட்டு, பின்னர் தொழுகைக்கு சென்றுள்ளார்கள் என அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள்

கூறியபோது நீங்கள்தானே! அவர் எனக் கேட்கப்பட்ட போது சிரித்தார்கள். (திர்மிதி, இப்னுமாஜா).

அதற்காக உழு செய்த பின் மனைவியை முத்தமிடுவது சுன்னத் என விளங்கிவிடக் கூடாது, இப்படி ஒன்று நடந்தால் அதற்கான மார்க்க சட்டம் என்ன? என்பதைத் தெரிந்து கொள்ளவே இந்த நடைமுறை.

**குறிக்கீடு:** அல்குர்ஆன் வுழு, மற்றும் தயம்மும் பற்றிக் குறிப்பிடும் போது " பெண்களை நீங்கள் **தொட்டால்** தண்ணீரையும் பெற்றுக் கொள்ளவில்லையானால் தூய்மையான மண்ணை நாடுங்கள்" (அந்நிஸா:43) (அல்மாயிதா: 06) எனக்குறிப்பிட்டுள்ளதே! அதன் விளக்கம் என்ன?

**பதில்** மேற்படி வசனத்தை காட்டி ஒருவர் பெண்ணைத் தொட்டால் ஒன்று அவர் தயம்மும் செய்ய வேண்டும், அல்லது உழு செய்ய வேண்டும். இவ்வாறு ஒரு வாதம் முன்வைக்கப்படுவதைப் பார்க்கின்றோம்.

அந்த வசனத்தில் **"லா மஸ்து முன்னிஸாஅ"** என்ற சொற்பிரயோகம் இடம் பெற்றுள்ளது. "லாமஸ" என்ற சொல்லுக்கு ஷாபி மத்ஹப் மௌலவிகள்தான் வெறுமெனே தொட்டால் என்ற பொருள் கூறுகின்றனர்.

ஆனால் இந்த இடத்தில் அவ்வாறு பொருள் கொள்ள அந்த வசனம் இடம் தரவில்லை. "மனைவியரை தீண்டினால்" "மனைவியருடன் உடலுறவு கொண்டால்" என்ற பொருளே இங்கு பல வழிகளில் பொருத்தமானதாகும். ***இதை பின்வரும் அடிப்படைகளைக் கவனித்தில் கொண்டு சரியான கருத்தாகவும் கொள்ளலாம்.***

❁ நபி (ﷺ) அவர்கள் தனது மனைவியர் சிலரை முத்தமிட்டு வுழு செய்யாது தொழுதமை (திர்மிதி).

❁ அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் நபி (ﷺ) அவர்களுக்கு குறுக்காக உறங்கிக் கொண்டிருக்க, சுஜூத் செய்த நபி (ﷺ) அவர்கள், தமது காலால் அன்னை அவர்களை குத்தி விட்டு, தொழுகையைத் தொடர்ந்தமை **(புகாரி).**

❁ இரவில் நபி (ﷺ) அவர்களைக் காணாத போது, அவர்களைத் துலாவிப் பார்த்த அன்னை ஆயிஷா (ரழி) அவர்களின் கை, நபி (ﷺ) அவர்களின் இருபாதங்களிலும் பட்டிருந்தும், நபி (ﷺ) அவர்கள் தனது தொழுகையை

தொடர்ந்தமை. (முஸ்லிம்) இவ்வாறு பல நிகழ்வுகள் நடந்தும், நபியவர்கள் உழு செய்யவில்லை என்றால் நாம் எடுத்தெழுதியதே அந்த வசனத்தின் சரியான பொருளாகும். அது மாத்திரமின்றி நமக்கு முன்னர் இப்னு அப்பாஸ் (ﷺ) போன்ற நபித்தோழர்களும் இக்கருத்தையே உறுதி செய்துள்ளனர்.

❁ ஆண், பெண் மாறிமாறிப்படுவதால் வுழு முறிவதாக அதிகம் அலட்டிக்கொள்வோர் ஏற்றுக் கொண்ட "ஹன.்.பி மத்ஹப்" நாம் முன்வைக்கும் வாதங்களையே முன்வைக்கின்றது என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

**தவா.்.ப் முடிந்ததும்.**

"தவாப்" முடிந்ததும் தவாபிற்காகத் திறந்திருந்த தோளை மூடிக் கொள்வதுடன், மகாமு இப்ராஹீமிற்குப் பின்னால் இரண்டு ரகஅத்துக்கள் தொழுதல். அதில் முதலாவது ரஅத்தில் "பாதிஹா" அத்தியாத்தை ஓதி முடித்த பின்னர், "அல்கா.்.பிரூன்" அத்தியாயத்தை ஓதுவதும், இரண்டாவது ரகஅத்தில் "பாதிஹா" அத்தியாத்தை ஓதிய பின் "அல்இக்லாஸ்" அத்தியாயத்தை ஓதுவதும் நபி வழியாகும். (தாரமி). சன நெருக்கடி காரணமாக மகாமு இப்ராஹீமிற்கு பின்னால் தொழ முடியாது போனால் ஹரத்தின் எந்த இடத்திலும் தொழுது கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்கள் மகாமு இப்ராஹீமில் தொழுகை முடிந்ததும் மீண்டும் ஹஜருல் அஸ்வதை டதமீண்டும் தொட்டு முத்தமிடுவார்கள் என்ற செய்திகளைப் பாரக்கின்றோம். ஒருவருக்கு அவ்வாறு செய்ய சந்தர்ப்பம் கிடைத்தால் அதை அவர் செய்து கொள்ளலாம்.



**மகாமு இப்ராஹீம்**

## ஸம்ஸம் நீர் அருந்துதல்.

மகாமு இப்ராஹீமில் தொழுகை முடிந்ததும் நபி (ஸல்) அவர்கள் ஸம் ஸம் நீர் அருந்தும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். தவா∴ப் செய்வோரின் வசதியைக் கவனத்தில் கொண்டு “ஸம்ஸம்” கிணத்திற்குச் செல்லும் வழி தற்போது மூடப்பட்டுள்ளது.

அதே நேரம், அது அமையப் பெற்றுள்ள பகுதியில் குழாய்கள் பொருத்தப்பட்டு நீர் அருந்துவதற்கான வசதி செய்து தரப்பட்டுள்ளது. அவற்றில் இருந்து தாரளமாக ஸம்ஸம் நீர் பருகிக் கொள்ளலாம்.

***ஸம்ஸம் நீர் எதற்காக பருகப்படுகின்றதோ அந்த நோக்கத்திற்காக அது அமையும் என்ற நபி மொழியைக் கவனத்தில் கொண்டு அதைப் பருகுதல்.***

# ஸ..∴பா மர்வா



**ஸ.்.பா, மர்வாவிற்கு இடையில் தொங்கோட்டம் ஓடுதல்**

பின்னர் “ஸ(F)பா” மலை மீதேறி அல்லாஹு அக்பர் என மூன்று தடவைகள் கூறி, அல்லாஹ்வை ஒருமைப்படுத்தி, துதித்த பின்னர், பின்வரும் அல்குர்ஆன் வசனத்தையும், திக்ரையும் ஓதி முடித்து, க.்.பாவை முன்னோக்கியவாறு தான் விரும்பும் பிரார்த்தனைகளைச் செய்தல். இவ்வாறு மூன்று தடவைகள் செய்தல். இறுதில் பிரார்த்தனை செய்ய வேண்டியதில்லை.

அதாவது மூன்று தடவைகள் திக்ரும், இரு தடவைகள் பிரார்த்தனையும் செய்தல்.

**ஸ.்.பாவில் ஓதவேண்டிய அல்குர்ஆன் வசனம்:**

**إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِن شَعَآئِرِ اللّهِ فَمَنْ حَجَّ الْبَيْتَ أَوِ اعْتَمَرَ فَلاَ جُنَاحَ عَلَيْهِ أَن يَطَّوَّفَ بِهِمَا وَمَن تَطَوَّعَ خَيْراً فَإِنَّ اللّهَ شَاكِرٌ عَلِيمٌ** (البقرة : 158)

இன்னஸ்ஸ**(F)**பா வல்மர்வ(த்)த மின்ஷஆயி ரில்லாஹ். **(F)**பமன் ஹஜ்ஜல் **(B)**பை(த்)த, அவி.்.தமற **(F)**பலா ஜுனாஹ அலைஹி அய்யத்தவ்வ**(F)**ப **(B)**பிஹிமா, **(F)**மன்ததவ்வஅ ஹைரன் **(F)**பஇன்னல்லாஹ ஷாகிருன் அலீம்.

**பொருள்:** நிச்சயமாக ஸ**(F)**பாவும், மர்வாவும் அல்லாஹ்வின் சின்னங்களில் உள்ளவையாகும். எவர் இந்த ஆலயத்தை (க.்.பாவை) “ஹஜ்” அல்லது “உம்ரா” செய்கிறாரோ அவர் அவை இரண்டிற்கும் இடையில் வலம் வருவது குற்றமில்லை. எவர் உபரியாக நன்மை செய்கிறாரோ (அவருக்கு) நிச்சயமாக அல்லாஹ் நன்றியுடையவன். யாவற்றையும் நன்கு அறிந்தவன். (அத்: அல்பகரா: வச:158).

**திக்ர்:**

**لاَإِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ أَنْجَزَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ ٱلأَحْزَابَ وَحْدَهُ .**

லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு, லஹுல் முல்க் வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர், அன்ஜ **(Z)**ஸ வ.ஃதஹு, வநஸர அ**(B)**ப்தஹு, வஹஸ**(Z)**மல் அஹ் **(Z)** ஸா**(B)**ப வஹ்தஹ் . (புகாரி, முஸ்லிம்).

**பொருள்:** வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு எந்த இணையும் இல்லை. ஆட்சியும், புகழும் அவனுக்கே உரியன. அவன் அனைத்து வஸ்துக்கள் மீதும் பேராற்றல்மிக்கவன். அவன் தனது வாக்கை நிறைவேற்றினான். அவனது அடியாருக்கு உதவி செய்தான். (நமது) எதிரிகளை தனித்தவனாக தோற்கடித்தான்.

**மர்வாவை நோக்கி ...**

பின் மர்வாவை நோக்கி “ஸ.ஃய்” தொங்கோட்டம் ஓட ஆரம்பித்தல். மர்வாவை நோக்கி செல்லும் போது இரண்டு “பச்சை பல்ப்” களுக்கும் இடையில் சற்று வேகமாக ஓடுதல். பின் நடந்து செல்லுதல். ஸ.ஃபாவில் ஆரம்பித்து மர்வாவை அடைவது ஒரு ஓட்டமாகும்.

## மர்வாவை வந்தடைந்ததும் ...

மர்வாவை வந்தடைந்ததும் ஸ**(F)**பாவில் ஓதிய அல்குர்ஆன் வசனத்தையும், திக்ரையும் ஓதி ஸபாவில் பிரார்த்தித்தது போன்று கிப்லாவை முன்னோக்கியவாறு பிரார்த்தனை செய்துவிட்டு, “ஸ**(F)**பா”வை நோக்கி ஓடுதல். **இவ்வாறு ஸ(F)பாவை வந்தடைந்தால் இரண்டு ஓட்டமாகும்.** இவ்வாறு ஏழு ஓட்டங்கள் ஓட வேண்டும். ஏழாவது ஓட்டம் மர்வாவில் முடிந்ததும் “திக்ர்” செய்யாது பின்வரும் கடமையை நிறைவு செய்யத் தயாராகுதல்.

## முடியை மழித்தல், அல்லது குறைத்தல்

உம்ராவின் நான்காவது கடமையாக இது விளங்குகிறது. உம்ராவின் சகல கடமைகளையும் அல்லாஹ்வின் தூதரின் வழிகாட்டலுக்கு அமைவாக நிறைவேற்றும் பலர் முடியை மழிப்பதில், அல்லது கத்தரிப்பதில் தமது மனோ இச்சையை முற்படுத்துவதை அவதானிக்க முடிகிறது.

**குறிப்பு:-** அரபியில் தலையை முழுமையாக மழிப்பதற்கு **"ஹல்க்"** என்றும், தலையின் சகல பாகங்களில் இருந்தும் நன்றாக குறைப்பதற்கு **"தக்ஸீர்"** அல்லது **"கஸ்ர்"** என்றும் கூறப்படும். அதனால் இதில் முடியை மழித்தல், அல்லது குறைத்தல் என்ற இரு நிலைகளே இருக்கின்றன. நான்கு முடிகளை வெட்டுதல் என்ற மூன்றாவது நிலை ஒன்று கிடையாது என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

❁ ***தமத்து.***ஃ முறையில் ஹஜ் செய்வோர் **துல்ஹஜ்** பிறை பத்தில் தமது தலையை முழுமையாக மழித்துக் கொள்ளவதற்காக உம்ராவின் போது தமது முடியைக் குறைத்துக் கொள்வதில் தப்பில்லை.

**பெண்கள் முடி கத்தரிப்பதற்கான அளவு.**

பெண்கள் தமது கொண்டையின் நுனியில் இருந்து விரற்கிடை (விரல் நுனி) அளவு கத்திரித்துக் கொள்ள வேண்டும். இத்தோடு உம்ராவின் கடமைகள் நிறைவு பெறுகின்றன.'

## உம்ரா பற்றிய சுருக்கம்.

(1) எல்லையில் இருந்து நிய்யத்துடன் இஹ்ராம் அணிதல்.

(2) க.ஃபாவை ஏழு முறை வலம் வருதல்.

(3) "ஸ.ஃபா", "மர்வா" வுக்கிடையில் ஏழு தடவை ஸ.ஃய் செய்தல்.

(4) முடியை மழித்தல், அல்லது முழுமையாகக் குறைத்தல்.

**குறிப்பு:-**

🌐 மேற்படி நான்கு கடமைகளும் "தமத்து.ஃ." முறையில் ஹஜ் செய்பவர் முழுமைப்படுத்திய பின்னரே தனது இஹ்ராத்தைக் களைய வேண்டும். இதன் பின் துல்ஹஜ் பிறை எட்டு அதிகாலை ஹஜ்ஜுக்காக **இஹ்ராம்** அணியும் வரை இவர் சாதாரண நிலையில் இருப்பவர் போன்றவராகின்றார். இவர் விரும்பினால் குடும்ப உறவும் ஹலாலானதே!

**... قَدِمَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَصْحَابُهُ صَبِيحَةَ رَابِعَةٍ مُهِلِّينَ بِالْحَجِّ فَأَمَرَهُمْ أَنْ يَجْعَلُوهَا عُمْرَةً فَتَعَاظَمَ ذَلِكَ عِنْدَهُمْ فَقَالُوا يَا رَسُولَ اللَّهِ أَيُّ الْحِلِّ قَالَ حِلٌّ كُلُّهُ (متفق عليه) وفي رواية: ........... فَلَمَّا قَدِمْنَا أَمَرَنَا النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ نَحِلَّ وَقَالَ أَحِلُّوا وَأَصِيبُوا مِنْ النِّسَاءِ (متفق عليه)**

நபி (ﷺ) அவர்களும், அவர்களின் தோழர்களும் ஹஜ்ஜுக்காக துல்ஹஜ் பிறை நான்கில் வந்த போது தனது தோழர்கள், கிரான் முறைப்படி அணிந்துவந்த இஹ்ராத்தின் முறையை தமத்துவுக்கான உம்ராவாக மாற்றும்படி கூறியது அது அந்த மக்களுக்கு பாரதூரமான ஒன்றாகத் தெரிந்தது. அப்போது அல்லாஹ்வின் தூதரே! (இதன் பின்னர்) எதெல்லாம் **ஹலால்** எனக் கேட்டனர். அனைத்தும் ஹலால் என நபி (ﷺ) அவர்கள் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்).

மற்றொரு அறிவிப்பில்:- மக்காவை வந்தடைந்து, தமத்து.ஃ. அடிப்படையிலான உம்ராவைச் செய்து முடித்ததும், எம்மிடம் "ஹில்" எனும் அனுமதிக்கப்பட்ட நிலைக்கு வாருங்கள், உங்கள் மனைவியரோடும் உறவுகொள்ளுங்கள் எனக் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

புகாரியில் இடம் பெறும் மற்றொரு அறிவிப்பில் "இறை இல்லத்தை தவா.ஃ.பும், செய்து, பின் ஸ.ஃ.ய்யையும் முடித்து, (தலையை நாம் மழித்த பின்னர்) எமது சாதாரண ஆடைகளை அணிந்தோம், எமது பெண்களுடன் குடும்ப உறவிலும் ஈடுபட்டோம்" என நபித்தோழர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

**மற்றொரு அறிவிப்பில்** : தனது தோழர்களுக்கு (அல்லாஹ்வின்) அந்த இல்லத்தை தவா.ஃ.ப் செய்து, ஸ.ஃ.பா, மர்வாவிற்கு இடையில் தவாப்

செய்யும்படியும், பலிப்பிராணியைத் தன்னுடன் கொண்டுவராதவர்கள் தலைமுடிகளைக் குறைத்துக் கொள்ளும்படியும் கட்டளையிட்டார்கள். **எவரது மனைவி தன்னுடன் வந்திருக்கின்றாரோ அவர் அவருக்கு ஆகுமாகும். அதே போன்று வாசனை தடவிக்கொள்ளுதல், (தைத்த) மாற்று ஆடைகளைப் அணிதல் ஆகியவையும் (ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணியும்வரை) ஆகுமானதே எனக் கூறியதாக நபி (ﷺ) அவர்களின் ஹஜ்ஜின் விபரம் பற்றி விபரிக்கும் இப்னு அப்பாஸ் (ؓ) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். (புகாரி).**

**கிரான், அல்லது இ.ஃப்ராத் செய்வோருக்கு இது தடையாகும்.**

அதே நேரம் கிரான், அல்லது இ.ஃப்ராத் முறையில் “ஹஜ்” செய்வோர் ஸ.ஃய் செய்து முடித்ததும் தமது இஹ்ராத்தை களையாது, தலையையும் மழிக்காது, மனைவியருடன் சல்லாபம் செய்யாது துல்ஹஜ் பிறை பத்தில் முடியைக் களைந்து, பின்னர் தவா.ஃபுல் இ.ஃபாழாவையும் முடித்த பின்பே மேற் சொன்ன அம்சங்கள் செய்ய அனுமதிக்கப்படுவர்.

உம்ராவின் ஏதாவது ஒரு கடமை விடுபட்டால் உம்ரா செல்லுபடியற்றதாகும். எல்லையில் இருந்து இஹ்ராம் அணிவதை விட்டாலே தவிர. அதற்காக “ஹத்ய்” எனப்படும் பலிப்பிராணி கொடுக்க வேண்டும். உம்ரா செல்லுபடியாகும்.

**இஹ்ராத்தின் சுன்னத்துக்கள்:**

(1) தல்பியாக் கூறுதல்.

(2) தவா.ஃபின் போது ஏழு சுற்றுகளிலும் வலது தோள்புயம் திறந்திருத்தல்.

(3) முதல் மூன்று சுற்றில் “ரம்ல்” ஓடுதல்.

(4) மகாமு இப்ராஹீமிற்கு பின்னால் இரண்டு ரகஅத் தொழுதல் .

(4) ஸம்ஸம் நீர் அருந்துதல். பின்பு, ஹஜருல் அஸ்வதைத் தொடுதல் .

(5) “ஸ.ஃபா” மர்வாவில் ஓத வேண்டிய வசனத்தையும், திக்ரையும் ஓதுதல்.

(6) “ஸ.ஃபா” “மர்வா” வில் இரு பச்சை பல்புகளுக்கும் இடையில் வேகமாக ஓடுதல்.

(7) ஸஃய் செய்கின்ற போது கிப்லாவை முன்னோக்கியவாறு பிரார்த்தனை செய்தல்.

**குறிப்பு:**

❁ ஒருவர் உம்ராவின் சுன்னத்துக்களை விடுவதால் அவரது உம்ரா செல்லுபடியானதாகும். ஆனால் நன்மையில் குறைவு ஏற்படும்.

## ❁ இஹ்ராம் அணிந்த நிலையில் தலை முடியை சிரைக்கும் நிலை ஏற்பட்டால்.?

ஒருவர் இஹ்ராம் அணிந்த நிலையில் பேன், பொடு போன்றவற்றின் தொல்லையால் தலைமுடியை சிரைக்க வேண்டிய நிர்பப்பந்தத்திற்குள்ளானால் அவர் தலையை வழித்துக் கொண்டு பின்வரும் வழிமுறையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

நான் ஹுதைபியாவில் இஹ்ராத்துடன் நின்று கொண்டிருந்தேன். எனது தலையில் இருந்து எனது முகம் வழியாக பேன்கள் சொரிந்து கொண்டிருந்தன. **“உங்களில் எவர் நோயாளியாக, அல்லது அவரது தலையில் (நோய்த்) தொல்லை உடையவராக இருக்கின்றாரோ அவர், நோன்பு பிடித்தல், தர்மம் செய்தல், ஒரு ஆட்டைப் பலியிடுதல் ஆகிய வழிமுறையில் (ஒன்றைக் கொண்டு) நிறைவேற்ற வேண்டும். (அல்பகரா:196).** என்ற வசனம் தன்பேரில் இறங்கியதாகக் குறிப்பிடும் கஃப் பின் உஜ்ரா (ﷺ) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் தன்னை அழைத்து, “மூன்று நாள் நோன்பு நோற்றுக் கொள், அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவளி, அல்லது ஒரு ஆட்டைப்பலியிடு என்று கூறியதாகக் கூறுகிறார்கள். (புகாரி, முஸ்லிம்)

இதன் மூலம் இஹ்ராம் அணிந்த ஒருவர் காரணத்துடன் தனது தலை முடியை வழித்துக் கொள்ள குறிப்பிட்ட சில பரிகாரங்களைச் செய்வதன் மூலம் மார்க்கம் அனுமதி வழங்கி இருக்கின்றது என்பதை அறிய முடிகின்றது.

## இரண்டு உம்ராக்கள் தொடர்பான விளக்கம்.

நபி (ﷺ) அவர்களும், அவர்களின் தோழர்களும் ஒரு பயணத்தில் ஓர் உம்ராவே செய்துள்ளனர். அவர்களோ, அவர்களின் தோழர்களோ தன்யீம் என்ற இடத்திலுள்ள "மஸ்ஜித் ஆயிஷா" சென்று இரண்டாவது உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து வரவில்லை. அப்படியானால் "மஸ்ஜித் ஆயிஷா" விற்கும் இரண்டாவது உம்ராவிற்கும் இடையில் உள்ள உறவுதான் என்ன ? என்ற கேள்வி உங்களிடம் எழலாம்.

**பதில்:** அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் நபி (ﷺ) அவர்களுடன் ஹஜ்ஜுக்காகச் சென்றிருந்தார்கள். மக்காவை வந்தடைந்ததும் "ஸரி.ஃ.ப்" எனும் இடத்தில் அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டது. அழுதவர்களாக நபி (ﷺ) அவர்களிடம் வந்து முறையிட்டார்கள். இது ஆதமின் பெண்மக்களுக்கு அல்லாஹ் விதித்தவைதானே!. ((அதற்காக ஓர் அழுகை வேண்டுமா? எனக் கேட்டு விட்டு))

**افعلي ما يفعل الحاج غير ان لا تطوفي بالبيت** "ஹாஜிகள் செய்யும் சகலதையும் நீ செய்து கொள். ஆனால் க.ஃ.பா ஆலயத்தை மாத்திரம் வலம் வராதே" என்று கூறினார்கள். உதிரப்போக்கு நின்றதும் குளித்து தூய்மையாகிய அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் தனது தூய்மை பற்றி நபி (ﷺ) அவர்களிடம் கூறினார்கள். விடுபட்ட தவாஃ.பயும், ஸஃ.யையும் பூர்த்தி செய்யுமாறு கூறி, அவர்களது சகோதரரான அப்துர்ரஹ்மான் அவர்களோடு **தன்யீமுக்கு** (இப்போதைய ஆயிஷா மஸ்ஜித் இருக்கும் இடத்திற்கு) அனுப்பி, அதிலிருந்து புறப்பட்டு வருமாறு கூறினார்கள். (புகாரி முஸ்லிமில் இடம் பெறும் நீண்ட அறிவிப்பின் சுருக்கம்). இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய பல அம்சங்கள் இருக்கின்றன.

1) இஹ்ராம் அணிந்த பின் மாதவிடாய் ஏற்படும் பெண்கள் க.ஃ.பாவை வலம் வருவது கூடாது. உதிரப்போக்கு தடைப்பட்டதும் குளித்து தூய்மையாகி அன்னை ஆயிஷா (ரலி) அவர்களைப் போன்று விடுபட்ட தமது "தவாப்" மற்றும் "ஸஃ.ய்" கடமைகளைத் தொடரலாம்.

**2)** அன்னை ஆயிஷா (ரழி) அவர்களுடன் பாதுகாப்பிற்காகச் சென்ற அவர்களது சகோதரர் அப்துர்ரஹ்மான் (ﷺ) அவர்கள் இரண்டாவது உம்ராச் செய்தார்களா என்றால் இல்லை.

**3)** மக்கா வெற்றியின் போது அங்கு பதினெட்டு நாட்களுக்கு மேல் தங்கி இருந்த நபி (ﷺ) அவர்களோ, அவர்களின் தோழர்களோ இரண்டாவது உம்ராவிற்காக ஆயிஷா மஸ்ஜிதில் இருந்து "இஹ்ராம்" அணிந்து வரவில்லை. மட்டுமின்றி அப்படி ஒரு மஸ்ஜித் நபி (ﷺ) அவர்களின் காலத்திலோ, அவர்களின் தோழர்களின் காலத்திலோ இருக்கவில்லை. இந்நிலையில் அதில் இருந்து பல உம்ராக்களுக்காக எவ்வாறு இஹ்ராம் அணிந்திருப்பார்கள்?

4) "ஹஜ்" "உம்ரா" வணக்கம் பற்றிக் குறிப்பிட்ட நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் لتأخذوا عني مناسككم (مسلم) ***"என்னில் இருந்து உங்கள் ஹஜ், உம்ராக் கடமைகளை எடுத்துக் கொள்ளுங்கள்"*** எனக் கூறினார்கள். (முஸ்லிம்). எனவே, வணக்க வழிபாடுகளில் அவர்கள் எதைச் செய்தார்களோ அதைச் செய்ய வேண்டும். எதைச் செய்யவில்லையோ அதைச் செய்யக் கூடாது. அந்த அடிப்படையில் ஒரு பயணத்தில் பல உம்ரா முறை அவர்களின் வழிமுறைக்கு அப்பாற்பட்டதாகும்.

ஒருவர் விரும்பினால் உம்ராக் கடமை முடிந்ததும் நபிலான வணக்கங்கள் செய்வது போன்று பல தவா.்.ப்கள் செய்வதற்கு நபி (ﷺ) அவர்கள் அனுமதி வழங்கி இருக்கின்றார்கள் (திர்மதி, நஸயி) அந்த அடிப்படையில் நபிலான பல தவா.்.ப்கள் செய்து கொள்ளலாம். அதற்காக இஹ்ராம் அணிய வேண்டும், ஏழுமுறை சுற்ற வேண்டும் போன்ற நிபந்தனைகள் எதையும் ஹதீஸ்களில் நாம் காணவில்லை.

## துல் ஹஜ் எட்டாம் நாள்

துல் ஹஜ் எட்டாவது நாள் காலை ஹாஜிகள் மினாவிற்கு புறப்படுவர். தமத்து.். முறையில் உம்ரா செய்து இஹ்ராத்தை களைந்தோர் மீண்டும் ஹஜ்ஜுக்காக தாம் இருக்கும் இடங்களில் இருந்தவாறே اَللّٰهُمَّ لَبَّيْكَ حَجًّا

**“அல்லாஹும் லெப்பைக்க ஹஜ்ஜன்” எனக் கூறி** இஹ்ராம் அணிந்து தத்தமது இடங்களில் இருந்து புறப்பட்டு மினாவை வந்தடைவர்.

அங்கு ஐவேளை தொழுகைகளில் சுருக்கமுடியுமான ழுஹர், அஸர், இஷா ஆகிய தொழுகைகளை சுருக்கியும், சுபஹ், மஹ்ரிப் ஆகிய தொழுகைகளை சுருக்காமலும் தொழுவர். மினாவில் தங்கும் மூன்று நாட்களிலும் இம்முறையையே கடைப்பிடிப்பர்.

இஹ்ராத்துடன் காணப்பட்ட கிரான், மற்றும் இ.ஃப்ராத் முறையில் உள்ளோர் தமது இஹ்ராத்துடனேயே மினாவை வந்தடைந்து மேற் கூறப்பட்டவாறு நடந்து கொள்வர்.

**மினாவில் அமைக்கப்பட்டுள்ள நவீன கூடாரங்கள்**



## துல் ஹஜ் ஒன்பதாம் நாள்

இத்தினமே “அர.ஃபா” தினம் என அழைக்கப்படுகின்றது. மினாவில் இருக்கும் ஹாஜிகள் ஒன்பதாம் நாள் காலை அரபாவை நோக்கி **“தல்பியா” அல்லது தஹ்லீல் (லாயிலா இல்லல்லாஹ்)** கூறி புறப்படுவர்.

**عَنْ مُحَمَّدِ بْنِ أَبِي بَكْرٍ الثَّقَفِيِّ أَنَّهُ سَأَلَ أَنَسَ بْنَ مَالِكٍ وَهُمَا غَادِيَانِ مِنْ مِنًى إِلَى عَرَفَةَ كَيْفَ كُنْتُمْ تَصْنَعُونَ فِي هَذَا الْيَوْمِ مَعَ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ كَانَ يُهِلُّ الْمُهِلُّ مِنَّا فَلَا يُنْكَرُ عَلَيْهِ وَيُكَبِّرُ الْمُكَبِّرُ مِنَّا فَلَا يُنْكَرُ عَلَيْهِ**

**(صحيح مسلم )**

முஹம்மத் பின் அபீபக்கர் (ரஹ்) கூறுகின்றார்கள், தான்அனஸ் பின் மாலிக் அவர்களோடு மினாவில் இருந்து திரும்பி வந்துகொண்டிருந்த போது இந்நாளில் நபிகள் நாயகத்துடன் நீங்கள் எப்படி நடந்து கொள்வீர்கள் என்று கேட்டார்கள், அதற்கு அவர்கள், எம்மில் **தஹ்லீல் (லாயிலா இல்லல்லாஹ) கூறுபவர் கூறுவார், தக்பீர் (அல்லாஹு அக்பர்) கூறுபவரும்** கூறுவார் அது (அல்லாஹ்வின் தூதரால்) மறுதலிக்கப்படாது எனக் கூறினார்கள். **(முஸ்லிம்).**

**(இப்போது அர.ஃபா பள்ளியின் ஒரு பகுதி அமைந்துள்ள இடம்)**



அர.ஃபாவிற்கு வெளியில் **“நமிரா”** எனும் இடத்தில் முடியுமானால் சூரியன் உச்சியில் இருந்து சாயும் வரை தங்கி விட்டு அதன்பின்னர், அர.ஃபா மைதானத்தில் பிரவேசித்தல். ஒருவர் மக்காவில், அல்லது ஊரில் இருந்தவாறு நேரடியாக ஒன்பதாம் நாள் அரபாவிற்கு வெருவதிலும் தப்பில்லை.

### அர.்.பாத் முற்ற வெளியில்

அர.்.பா பள்ளியின் விஸ்தரிக்கட்டுள்ளதால் அதன் பெரும் பகுதி அர.்.பா எல்லையில் இருந்து வெளியாகக் காணப்படுகின்றது. அர.்.பா எல்லை எது என்பது அங்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

நபி (ﷺ) அவர்கள் அர.்.பா எல்லைக்குள் காணப்படும் நமிரா என்ற இடத்தில் பிரவேசித்த பின்னர் மக்களுக்கு நீண்டதொரு உரை நிகழ்த்தினார்கள். அதன் பின் ளுஹருக்கான பாங்கைக் கூறி, பின்னர் இகாமத்தும் கூறி ழுஹர் தொழுகையை இரண்டாகவும், பின்னர் இகாமத் கூறி, அஸர் தொழுகையை இரண்டாகவும் சேர்த்தும், சுருக்கியும் தொழுதார்கள். பின்னர் தனது ஒட்டகையில் அமர்ந்தவாறு சூரியன் மறையும் வரை பிரார்த்தித்தார்கள்.

நமது மௌலவிகள் கூட்டு துஆ செய்து கொடுப்பது போன்று அல்லாஹ்வின் தூதர் அர.்.பாவில் ஆயிரக்கணக்கில் திரண்டிருந்த தனது தோழர்களைக் கூட்டுப் பிரார்த்தனைக்காக அழைக்கவுமில்லை; பிரார்த்திக்கவுமில்லை.

கூட்டுப்பிரார்த்தனைக்கு பொருத்தமான தினம் ஒன்று இருக்குமானால் அது அர.்.பா தினமாகத்தான் இருக்க முடியும். அந்த தனத்திலேயே கூட்டுப்பிரார்த்தனை செய்யவில்லையானால் நாமும் அவ்வறே நடந்து கொள்ள வேண்டும்.

## பகல் வேளைகளில் அர.்.பா தவறிவிட்டால்

அர.்.பாத்தில் பகல் வேளையில் தரிப்பதற்கு தடங்கல் ஏதும் ஏற்பட்டோர், இரவின் ஒரு பகுதியில் அதில் தரித்தாலும் போதுமானதாகும்.

**عَنْ عُرْوَةَ بْنِ مُضَرِّسِ بْنِ أَوْسِ بْنِ حَارِثَةَ بْنِ لَامٍ الطَّائِيِّ قَالَ أَتَيْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِالْمُزْدَلِفَةِ حِينَ خَرَجَ إِلَى الصَّلَاةِ فَقُلْتُ يَا رَسُولَ اللَّهِ إِنِّي جِئْتُ مِنْ جَبَلَيْ طَيِّئٍ أَكْلَلْتُ رَاحِلَتِي وَأَتْعَبْتُ نَفْسِي وَاللَّهِ مَا تَرَكْتُ مِنْ حَبْلٍ إِلَّا وَقَفْتُ عَلَيْهِ فَهَلْ لِي مِنْ حَجٍّ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ مَنْ شَهِدَ صَلَاتَنَا هَذِهِ وَوَقَفَ مَعَنَا حَتَّى نَدْفَعَ وَقَدْ وَقَفَ بِعَرَفَةَ قَبْلَ ذَلِكَ لَيْلًا أَوْ نَهَارًا فَقَدْ أَتَمَّ حَجَّهُ وَقَضَى تَفَثَهُ ( رواه الترمذي)**

நபி (ﷺ) அவர்கள் முஸ்தலிபாவில் தொழுகைக்கு ஆயத்தமானபோது அல்லாஹ்வின் தூதரே! நானும் களைத்து, எனது ஒட்டகத்தையும் சலிப்படையச் செய்து, “தை”யின் இருமலைகள் ஊடாக மாத்தரமின்றி மற்ற எந்த மலையையும் விட்டுவைக்காது எல்லா இடத்திலும் நின்று வந்தேன் எனது “ஹஜ்” செல்லுபடியாகுமா? என உர்வா பின் முளர்ரிஸ் (ﷺ) அவர்கள் கேட்டார்கள் **“எவர் எம்முடன் முஸ்தலிபாவிற்கு வந்து, நமது இத்தொழுகையில் நம்மோடு பங்கேற்று, இதற்கு முன்னர் இரவிலோ, அல்லது பகலிலோ அர.ஃ.பாவில் சொற்ப நேரம் தங்கி விட்டு வந்திருப்பிருப்பாரானால் அவரது “ஹஜ்” செல்லுபடியாகும், அவரது கடமையும் நிறைவேறும்.** என பதிலளித்தார்கள். (அபூதாவூத்). இதன் உள்ளடக்கத்தின் மூலம் இதைத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

## துல் ஹஜ் ஒன்பதாம் நாள் சூரிய அஸ்தமனத்தின் பின்

துல் ஹஜ் ஒன்பதாம் நாள் சூரிய அஸ்தமனத்தின் பின் அர.ஃ.பாத்தில் இருந்து முஸ்தலிபாவை நோக்கி செல்ல வேண்டும். அங்கு ம.ஃ.ரிப் தொழுகையை மூன்று ரகஅத்தாகவும், இஷாவைச் சுருக்கி இரண்டு ரகஅத்தாகவும் பிற்படுத்தி ஒரு அதான் இரண்டு இகாமத் அடிப்படையில் தொழ வேண்டும். பின்பு உறங்கிவிட வேண்டும். நபி (ﷺ) அவர்கள் இவ்வாறே செய்துள்ளார்கள். (புகாரி, முஸ்லிம்).

فَإِذَا أَفَضْتُم مِّنْ عَرَفَاتٍ فَاذْكُرُواْ اللّهَ عِندَ الْمَشْعَرِ الْحَرَامِ وَاذْكُرُوهُ كَمَا هَدَاكُمْ وَإِنْ كُنْتُمْ مِنْ قَبْلِهِ لَمِنَ الضَّالِّينَ

[البقرة : 198]

***“நீங்கள் அர.ஃ.பாத்தில் இருந்து சென்றால் ம‘அறுல் ஹராமில் வைத்து அல்லாஹ்வை நினைவு கூருங்கள். அவன் உங்களுக்கு நேர்வழிகாட்டியமைக்காகவும் அவனை நினைவுகூருங்கள். நீங்கள் இதற்கு முன்னர் வழி தவறியவர்களாக இருந்தீர்கள்.*** (அல்பகரா. வச: 197) என அல்லாஹ் குறிப்பிடுவதற்கு அமைவாக அவனை நாம் நினைவு கூரவேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் முஸ்தலி.ஃ.பாவை வரும் மக்ககளை நோக்கி

**أَيُّهَا النَّاسُ السَّكِينَةَ السَّكِينَةَ மக்களே! அமைதி! அமைதி எனக் கூறுவார்கள்.**

**முஸ்தலி.ஃ.பாவை வந்தடைந்ததும்** ம.ஃ.ரிப், மற்றும் இஷாத் தொழுகைகளை பிற்படுத்தியும் சுருக்கியும் தொழுவார்கள், அவ்விரண்டிற்கும் இடையில் சுன்னத்துக்கள் எதுவும் தொழாமல் .ஃ.பஜ்ர் உதயமாகும் வரை நன்றாக உறங்கிவிடுவார்கள். .ஃ.பஜ்ர் நேரம் தெளிவாக உதயமானதும் .ஃ.பஜ்ரைத் தொழுவார்கள் பின்னர், மஷ்அறுல் ஹராம் (தற்போது மஸ்ஜித் கலீல்) இருக்கும் இடத்திற்கு தனது கஸ்வா ஒட்டகத்தில் ஏறி வருவார்கள். அங்கு வந்தடைந்ததும்

**...فَاسْتَقْبَلَ الْقِبْلَةَ فَدَعَاهُ وَكَبَّرَهُ وَهَلَّلَهُ وَوَحَّدَهُ فَلَمْ يَزَلْ وَاقِفًا حَتَّى أَسْفَرَ جِدًّا فَدَفَعَ قَبْلَ أَنْ تَطْلُعَ الشَّمْسُ**

**((صحيح مسلم ))**

கிப்லாவை முன்னோக்கியவர்களாக அல்லாஹ்விடம் துஆக் கேட்பார்கள், அவனை (அல்லாஹு அக்பர்) எனக் கூறிப் பெருமைப்படுத்துவார்கள். **லாயிஹலாஹ இல்லல்லாஹ்** கூறி அவனை உயர்வுபடுத்தி, துதிப்பார்கள். (முஸ்லிம்)

ஒருவர் மஷ்அருல் ஹராமில் மட்டுமல்லும்லாது முஸ்தலி.ஃ.பாவின் எந்த இடத்திலும் தங்கிக் கொள்ளலாம்.

وَوَقَفْتُ هَاهُنَا وَجَمْعٌ كُلُّهَا مَوْقِفٌ (( صحيح مسلم ))

நான் இங்கு தங்கியுள்ளேன். ஜம்வு ((மக்கள் கூடும்)) முஸ்தலி.ஃ.பா அனைத்தும் தங்க முடியுமான இடமாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள். (முஸ்லிம்)

**இயலாத பெண்கள் குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னதாகவே கல்லெறியச் செல்லலாம்.**

நோயாளிகளான பெண்கள், பலவீனமானோர், உடல் ஆரோக்கியம் குறைந்தோர் துல் ஹஜ் பத்தாவது நாள் .ஃ.பஜ்ர் உதயமாகும் வரை முஸ்தலிபாவில் தங்கி இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அவர்கள் இரவின் பெரும்பகுதி கழிந்த பின் கல்லெறிவதற்காக மினாவிற்கு செல்வதற்கான சலுகை அளிக்கப்பட்டுள்ளதை பின்வரும் நிகழ்ச்சியின் மூலம் உறுதி செய்யலாம்.

அன்னை ஸவ்தா (ரழி) அவர்கள் முஸ்தலிபாவில் தங்கிய இரவு மக்கள் நெருக்கடிக்கு முன்னதாகவே போவதற்கு நபி (ﷺ) அவர்களிடம் அனுமதி கோரினார்கள். அவர்கள் கொழுத்த பெண்ணாக இருந்தார்கள். அவர்களுக்கு அனுமதி வழங்கினார்கள். காலை உதயமாகும் வரை எம்மை தடுத்துவைத்திருந்தார்கள். அவர்களுடனேயே நாமும் (மினா நோக்கி) புறப்பட்டோம். எனக் குறிப்பிடும் அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் ஸவ்தா அவர்கள் உத்தரவு கேட்டது போன்று நானும் கேட்டு நேரகாலத்துடன் செல்வதானது வேறு ஒரு மகிழ்ச்சியான செய்தி கிடைப்பதைவிட எனக்கு மிக விருப்பமானதாகும் எனக் கூறுகிறார்கள்.(புகாரி).

அன்னை அஸ்மா (ரழி) அவர்கள் முஸ்தலி∴பாவில் தங்கிய இரவு எழுந்து தொழுவார்கள், பின்னர் தனது அடிமை இடம் மகனே! நிலவு மறைந்துவிட்டதா? எனக் கேட்பார்கள். அவர் இல்லை என்றதும் மீண்டும் தொழுவார்கள், பின்னர் மகனே! நிலவு மறைந்துவிட்டதா எனக் கேட்பார்கள். அவர் ஆம் என்றதும் புறப்படுங்கள் எனக் கூறுவார்கள். நாம் புறப்பட்டு, (பெரிய) ஜம்ரா வரை வந்தடைவோம். அங்கு வந்ததும் அவர்கள் கல் எறிவார்கள் பின்னர் திரும்பி ∴ஜ்ரை அவர்கள் தங்கி இருக்கும் இடத்தில் தொழுவார்கள். அவ்நோம் அதிகாலைப் பொழுது உதயத்தின் முன் (நேரகாலத்தோடல்லவா) செய்து முடித்துள்ளோம் என்றேன். அப்போது அவர்கள்

يَا بُنَيَّ إِنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَذِنَ لِلظُّعُنِ மகனே! நபி (ஸல்) அவர்கள் பெண்களுக்கு அனுமதிவழங்கியுள்ளார்கள் என்று கூறுவார்கள். (நூல்: புகாரி)

### பெருநாள் தினத்தில் நோன்பு நோற்பது தடையாகும்.

**துல் ஹஜ்** பத்தாம் நாள் பெருநாள் தினமாகும். அதில் நோன்பு நோற்பது தடை செய்யப்பட்டுள்ளது. இருப்பினும் ஹஜ் கடமைகளின் போது தவறுகள் ஏற்பட்டமைக்கான பரிகார நோன்பை அய்யாமுத்தஷ்ரீக் நாட்களின் நோட்பதற்கு அனுமதிக்கும் சில அறிவிப்புக்கள் காணப்படுகின்றன.

**عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ إِنَّ يَوْمَ عَرَفَةَ وَيَوْمَ النَّحْرِ وَأَيَّامَ التَّشْرِيقِ عِيدُنَا أَهْلَ الْإِسْلَامِ وَهِيَ أَيَّامُ أَكْلٍ وَشُرْبٍ** (سنن النسائي / النهي عن صوم عرفة)

*அர.∴.பா தினமும், அறுத்துப்பலியிடும் நாளும், (துல் ஹஜ் பத்தாம் நாளும்), அய்யாமுத்தஷ்ரீகுடைய நாளும் இஸ்லாமிய மக்களாகிய நமது பெருநாள் தினமாகும். அவை உண்டு, பருகும் தினங்களாகும் என்று நபிகள் நாயகம் (ﷺ) கூறினார்கள். (நூல்: நஸயி).*

## துல் ஹஜ் பத்தாம் நாள் செய்யப்படும் அமல்கள்.

**“துல்ஹஜ்”** பத்தாம் நாள் பல அமல்களை செய்ய வேண்டி இருப்பதால் பொறுமையும், சகிப்புத்தன்மையும் அதிகம் தேவைப்படுகின்றது. அதில் ஹஜ்ஜுடன் தொடர்பான பல அமல்கள் இடம் பெறுவதானாலேயே அந்த தினத்தை **‘அல்ஹஜ்ஜுல் அக்பர்”** மாபெரும் ஹஜ் தினம் என்று அழைக்கப்படுகின்றது. அதில் பின்வரும் காரியங்களை செய்ய வேண்டும்.

● (1) **கல்லெறிதல்.** (மக்காவிற்கு சமீபமாக இருக்கும்) **“ஜம்ரதுல்குப்ரா”** என்ற பெரிய ஜம்ராவிற்கு மட்டும் கல்லெறிதல். இதற்காக முஸ்தலிபாவில் தங்கி இருப்போர் ∴பஜ்ர் தொழுகையின் பின் தல்பியாக் கூறிக் கொண்டு புறப்படுதல்.

கல்லெறியும் வரை தல்பியாவைத்தொடர வேண்டும். அதிகாலை முதல் நள்ளிரவு வரை கல் எறியலாம். **“அல்லாஹ் அக்பர்”** எனக் கூறியவாறு ஏழு கற்கள் மாத்திரம் எறிய வேண்டும்.

عَنْ جَابِرٍ قَالَ رَأَيْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ رَمَى جَمْرَةَ الْعَقَبَةِ ضُحًى وَأَمَّا بَعْدَ ذَلِكَ فَبَعْدَ زَوَالِ الشَّمْسِ (سنن ابن ماجه / رمي الجمار أيام التشريق)

அல்லாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள், (பெருநாள் அன்று) அதிகாலை நேரம் ஜம்ரத்துல் அக்பாவிற்கு கல்லறிந்ததை நான் பார்த்தேன், அதற்குப் பின், சூரியன் உச்சியில் இருந்து சாய்ந்த பின்பு (எறிந்தார்கள்) என ஜாபிர் (ரழி) அவர்கள் கூறுகின்றார்கள். (இப்னுமாஜா)

(2) முடியை மழித்தல், அல்லது முழுமையாகக் குறைத்தல்.

உம்ராக்கடமை பற்றிய விபரத்தில் இது பற்றி தெளிவாகத் தரப்பட்டுள்ளது
.

(3) **தவா.்.புல் இ.்.பாழா செய்தல்.** அதாவது “கிரான்”, அல்லது “இ.்.ப்ராத்” முறையில் ஹஜ் செய்தோர் பிறை பத்தில் இஹ்ராம் அணிந்த நிலையில் ஏழுமுறை தவா.்.ப் மாத்திரம் செய்தல். இதற்கு **‘தவா.்.புஸ் ஸியாரா”** என்றும் கூறப்படும்.

தமத்து.். முறையில் ஹஜ் செய்தோர் இஹ்ராம் அணிந்த நிலையில் க.்.பாவை ஏழு முறை தவா.்.ப் செய்து, “ஸ.்.ய்யும் செய்தல். இதற்கே **“தவா.்.புல் இபாழா”** எனப்படும்.

**பின்பு வணக்கத்திலும், இறை நினைவிலும், பிரார்த்தனையிலும் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளல். அது பற்றிய அல்லாஹ்வின் அறிவுரையைக் கேழுங்கள்.**

**ثُمَّ أَفِيضُوا مِنْ حَيْثُ أَفَاضَ النَّاسُ وَاسْتَغْفِرُوا اللَّهَ إِنَّ اللَّهَ غَفُورٌ رَحِيمٌ (199) فَإِذَا قَضَيْتُمْ مَنَاسِكَكُمْ فَاذْكُرُوا اللَّهَ كَذِكْرِكُمْ آبَاءَكُمْ أَوْ أَشَدَّ ذِكْرًا فَمِنَ النَّاسِ مَنْ يَقُولُ رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا وَمَا لَهُ فِي الْآخِرَةِ مِنْ خَلَاقٍ (200) وَمِنْهُمْ مَنْ يَقُولُ رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ (201) أُولَئِكَ لَهُمْ نَصِيبٌ مِمَّا كَسَبُوا وَاللَّهُ سَرِيعُ الْحِسَابِ (202) [البقرة : 199 – 202]**

*பிறகு, நீங்கள் மற்ற மனிதர்கள் திரும்புகின்ற (முஸ்தலி.்.பா என்னும்) இடத்திலிருந்து நீங்களும் திரும்பிச் செல்லுங்கள், (அங்கு மினாவில்) அல்லாஹ்விடம் மன்னிப்பு கோருங்கள், நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்போனாகவும், மிக்க கருணையுடையோனாகவும் இருக்கின்றான்.*

*உங்கள் ஹஜ்ஜின் கிரியைகளை நீங்கள் முடித்ததும், (இதற்கு முன்னர்) உங்கள் தந்தையரை (குலப் பெருமைபாரட்டி) நீங்கள் நினைவு கூர்ந்ததைப் போல் - இன்னும் அழுத்தமாக- அதிகமாக*

*அல்லாஹ்வை நினைவு கூர்ந்து திக்ருசெய்யுங்கள், 'எங்கள் இரட்சகனே! இவ்வுலகிலேயே (எல்லாவற்றையும்) எங்களுக்குத் தந்துவிடு" என்று கூறும் சிலரும் மனிதர்களில் உள்ளனர். இத்தகையோருக்கு மறுமையில் யாதொரு நற்பாக்கியமும் இல்லை. .இன்னும், எங்கள் இரட்சகனே! எங்களுக்கு இவ்வுலகிலும், மறுமையிலும் நற்பாக்கியங்களைத் தந்தருள்வாயாக, இன்னும் நரகநெருப்பின் வேதனையிலிருந்தும் எம்மைக் காத்தருள்வாயாக! எனக் கேட்போரும் அவர்களில் உள்ளனர்.*

*202. இவ்வாறு, (இம்மை, மறுமையின் நற்பேறுகளைக் கேட்கின்ற) அவர்களுக்குத்தான் அவர்கள் சம்பாதித்தவற்றின் நற்பாக்கியங்கள் உண்டு, தவிர, அல்லாஹ் கணக்கெடுப்பதில் மிகத் தீவிரமானவன். (அல்பகரா: 199-202).*

**(4) பலிப் பிராணியை அறுத்தல்.**

இது ஹஜ்ஜுப் பெருநாள் தினத்தில் நாட்டில் நிறைவேற்றப்படும் உழ்ஹிய்யாக் கிரியையில் இருந்து வேறுபட்ட கடமையாகும். ஹஜ் கடமையை தமத்து∴ முறையில் செய்தோர், அல்லது அதில் தடுக்கப்பட்ட ஒன்றை செய்தோர் இப்பலிப்பிராணியை கட்டாயம் கொடுத்தாக வேண்டும். ஆனால் உழ்ஹிய்யா அவ்வாறு கட்டாயமானதன்று.

ஒட்டகத்திலும், மாட்டிலும் ஏழுபேர் கூட்டுச் சேரலாம், ஒரு ஆட்டை ஒருவர் மாத்திரமே கொடுக்கலாம்.

நபி (ﷺ) அவர்களின் காலத்தில் **துல்ஹஜ்** பிறை பத்திலும், அதைத்தொடர்ந்தும் இக்கடமை நிறைவேற்றப்பட்டுள்ள காரணத்தால் அதற்கு முன்னர் நிறைவேற்றுவது கூடாது. **பின்வரும் வசனம் இது பற்றி விளக்கியுள்ளது.**

**وَلَا تَحْلِقُوا رُءُوسَكُمْ حَتَّى يَبْلُغَ الْهَدْيُ مَحِلَّهُ [البقرة : 196]**

அந்த ஹத்யு (குர்பான் செய்யப்படும் பிராணி) அதன் இடத்தை அடைவதற்கு முன் உங்கள் தலைமுடிகளைக் களையாதீர்கள். (அல்பகரா:: 196).

**ஹஜ்** வழிகாட்டிகள் பணத்தை மீதப்படுத்துவதற்காக இந்தக் குர்பானியை நேர காலத்துடன் நிறைவேற்றும் படி ஹாஜிகளை வற்புறுத்துவதாகக் கேள்விப்படுகின்றோம். இதை விடுத்து ஹாஜிகள் தமது கடமையை உரிய நேரத்தில் நிறைவேற்றுவதில் உறுதியாக இருக்க வேண்டும்.

**பலிப்பிராணி கொடுக்க வசதியற்றோரா்** ஹஜ்ஜில் மூன்று நோன்புகளும், நாடு திரும்பிய பின்னர் ஏழு நோன்புகளும் (மொத்தம் பத்து நோன்புகள்) நோற்க வேண்டும்.

**குறிப்பு:-** இத்தினத்தில் மேற் கூறப்பட்ட அம்சங்களில் எதையேனும் ஒருவர் முற்படுத்தி, அல்லது பிற்படுத்திச் செய்வதில் குற்றமில்லை. இவற்றை ஒருவர் முழுமையாக நிறைவேற்றினால் உடலுறவு உட்பட இஹ்ராத்தின் நிலையில் தடுக்கப்பட்டிருந்த அனைத்தும் (ஹலால்) அனுமதிக்கப்பட்டதாகி விடும்.

**அதே நேரம் "தவா.்.புல் இ.்.பாழா" மற்றும் ஸ.்.ய்** செய்யாதிருப்பின் மனைவியருடன் உடலுறவு கொள்வதைத் தவிர இஹ்ராத்துடன் தடை செய்யப்பட்டவை அனைத்தும் அனுமதிக்கப்படும்.

## துல் ஹஜ் 11,12,13 ம் நாட்கள்

**தொழுகையை நிறைவேற்றல்** :- மினாவில் தங்கி ஐவேளை தொழுகைகளில் சுருக்கமுடியுமான ழுஹர், அஸர், இஷா ஆகிய தொழுகைகளை சுருக்கியும், சுபஹ், மஹ்ரிப் ஆகிய தொழுகைகளை சுருக்காமலும் அதன் அதன் நேரத்தில் தொழுதல்.

**கல்லெறிதல்.** சூரியன் உச்சியில் இருந்து சாய்ந்த பின் முதலாவதாக **"ஜம்ரதுஸ் ஸுஹ்ரா"** விற்கும்,

இரண்டாவதாக **"ஜம்ரதுல் உஸ்தா"** விற்கும்

மூன்றாவதாக **“ஜம்ரதுல் குப்ரா”** விற்கும் ஒன்றிற்கு தலா ஏழு கல் விகிதம் மொத்தம் இருபத்தி ஒரு சுண்டிவிடும் அளவான கற்களை எறிய வேண்டும்.

## எறியும் முறை

- **அல்லாஹு அக்பர் எனக் கூறி ஒன்றன் பின் ஒன்றாக எறிதல்.**
- **“ஜம்ரதுஸ் ஸுஹ்ரா”** விற்கு கல் எறிந்ததும் க.்.பாவை தனக்கு இடதாவும் மினாவையும் தனக்கு வலதுபக்கமும் ஆக்கி இரு கைகளையும் உயர்த்தி, கிப்லாவை முன்னோக்கிவாறு நீண்ட நேரம் பிரார்த்தித்தல்.
- **“ஜம்ரத்துல் உஸ்தா”** விற்கு கல் எறிந்ததும் அதைவிட்டும் சற்றுமுன் இடது பக்கமாக நகர்ந்து, தனது வலது பக்கமாக ஆக்கி இருகைகளையும் உயர்த்தியவாறு கிப்லாவை முன்னோக்கி நின்றாவாறு நீண்டநேரம் பிரார்த்தித்தல்.

### பின்வரும் படத்தை சற்று அவதானியுங்கள்




## குறிப்பு

- **“ஜம்ரத்துல் குப்ரா”** விற்கு கல் எறிந்ததும் திக்ர், பிரார்த்தனை எதுவும் இன்றி திரும்பி விடுதல்.
- இக்கடமையினை துல்ஹஜ் 11,12, ஆகிய இரண்டு நாட்களில் கட்டாயம் நிறைவேற்ற வேண்டும். 13ம் நாளன்று விரும்பி**னால்** கல்லெறிந்தோ,

எறியாமலோ நாடுதிரும்பலாம் என்பதை பின்வரும் அல்குர்ஆன் வசனத்தின் மூலம் அறியலாம்.

فَمَن تَعَجَّلَ فِي يَوْمَيْنِ فَلاَ إِثْمَ عَلَيْهِ وَمَن تَأَخَّرَ فَلا إِثْمَ عَلَيْهِ لِمَنِ اتَّقَى [البقرة : 203

யார் குறித்த தினங்களுக்குள் (முடித்து) அவசரமாகச் செல்கிறாரோ அவர்மீதும் குற்றமில்லை. (மேலதிக) இறையச்சமுடையவர் இருதினங்கள் (கழிந்த பின்பு) தாமதித்தாலும் அவர்மீதும் குற்றமில்லை. (அத்: அல்பகரா. வசனம் : 203 )

## அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் நோன்பு நோற்கலாமா?

துல் ஹஜ் பிறை 11, 12, 13 ஆகிய நாட்கள் **அய்யாமுத் தஷ்ரீக்** எனக் கூறப்படும். இந்த நாட்களில் நோன்பு நோற்பது பற்றி பொதுவாக தடை செய்யப்பட்டுள்ளது.

عَنْ نُبَيْشَةَ الْهُذَلِيِّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَيَّامُ التَّشْرِيقِ أَيَّامُ أَكْلٍ وَشُرْبٍ (صحيح مسلم )

**அய்யாமுத் தஷ்ரீக் உடைய நாட்களானது உண்டு, பருகி (மகிழும்) நாட்காளாகும் என நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள். (முஸ்லிம்).**

இருப்பினும், **‘ஹத்ய்’** எனப்படும் பலிப்பிராணி கொடுக்க வேண்டியவர்கள் அதற்கான வசதிகளைப் பெறாதபோது நோன்புநோற்க சலுகை அளிக்கப்பட்டுள்ளது.

بَاب صِيَامِ أَيَّامِ التَّشْرِيقِ وَقَالَ لِي مُحَمَّدُ بْنُ الْمُثَنَّى حَدَّثَنَا يَحْيَى عَنْ هِشَامٍ قَالَ أَخْبَرَنِي أَبِي كَانَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا تَصُومُ أَيَّامَ التَّشْرِيقِ بِمِنًى وَكَانَ أَبُوهَا يَصُومُهَا ( صحيح البخاري )

அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் மினாவில் நோன்பு நோற்பவர்களாக இருந்தார்கள், அவரது தந்தை (அபூபக்கர்) அவர்களும் அவற்றில் நோன்பு நோற்பார்கள். (புகாரி).

**عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمْ قَالَا لَمْ يُرَخَّصْ فِي أَيَّامِ التَّشْرِيقِ أَنْ يُصَمْنَ إِلَّا لِمَنْ لَمْ يَجِدْ الْهَدْيَ (صحيح البخاري )**

**“ஹத்ய்” எனப்படும் பலிப்பிராணி கொண்டுவராதவர்களுக்கே அன்றி மற்றவர்களுக்கு அய்யாமுத் தஷ்ரீக் நாட்களில் நோன்பு நோற்பதற்கு சலுகை அளிக்கப்படவில்லை என இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். (புகாரி).**

**عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ الصِّيَامُ لِمَنْ تَمَتَّعَ بِالْعُمْرَةِ إِلَى الْحَجِّ إِلَى يَوْمِ عَرَفَةَ فَإِنْ لَمْ يَجِدْ هَدْيًا وَلَمْ يَصُمْ صَامَ أَيَّامَ مِنًى (صحيح البخاري )**

தமத்து.ஃ. முறையில் ஹஜ் செய்பவர் அர.ஃ.பா தினம் வரை நோன்பு நோற்பார். அவர், ஹத்ய் (பலிப்பராணியை) பெற்றுக்கொள்ளமாலும், நோன்பு நோற்காமலும் இருப்பாராயின் அவர் மினாவுடைய நாட்களில் நோற்றுக் கொள்வார் என இப்னு உமர் (ரழி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். (புகாரி)

**துல்ஹஜ் 12-ம் நாள் சூரியன் மறைந்துவிட்டால் ……**

**و حَدَّثَنِي عَنْ مَالِك عَنْ نَافِعٍ أَنَّ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ كَانَ يَقُولُ مَنْ غَرَبَتْ لَهُ الشَّمْسُ مِنْ أَوْسَطِ أَيَّامِ التَّشْرِيقِ وَهُوَ بِمِنًى فَلَا يَنْفِرَنَّ حَتَّى يَرْمِيَ الْجِمَارَ مِنْ الْغَدِ (( الموطأ لمالك ))**

யார் ஒருவர் மினாவில் தங்கி இருக்கும் வேளை சூரிய மறைந்துவிடுகின்றதோ அவர் மறுநாள் கல்லெறிகின்ற வரை அங்கிருந்து செல்ல வேண்டாம் என அப்துல்லாஹ் பின் உமர் (ரழி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். (முவத்தா மாலிக்).

**தவா.ஃ.புல் வதா**

“ஹஜ்” கடமை முடிந்து தமது நாடுகளுக்கு, அல்லது பிரதேசங்களுக்கு திரும்புவோர் “தவாபுல் வதா.ஃ.” என்ற இறுதித் தவா.ஃ.ப் செய்வது கடமையாகும்.

ஹஜ் செய்யும் பெண்களுக்கு மாதவிடாய் போன்ற உபாதைகள் ஏற்படுவது இயல்பானதாக இருந்தாலும், அது ஹஜ்ஜின் சில கிரியைகள் செய்வதற்கு தடையாக அமையும் என்பதை முன்னரும் கண்டோம்.

***தவாபுல் வதா*** செய்யவிருக்கும் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவர் அத்தவாபை செய்யாது நாடு திரும்பலாம். ஆனால் **“தவாபுல் இபாழா”** எனப்படும் ஹஜ்ஜின் தவா.ஃ.ப் செய்வதற்கு முன்னர் ஏற்படுமாயின் தூய்மை ஏற்படும் வரை அதற்காக காத்திருக்க வேண்டும்.

**أمر الناس أن يكون آخر عهدهم بالبيت إلا أنه خفف عن المرأة الحائض** . (بخاري)

இவ்வாலயத்துடன் மக்களின் இறுதி உடன்படிக்கை (தவாபுல் வதாவினால்) அமையப் பெறல் வேண்டும். என்றாலும் மாதவிடாய் ஏற்பட்ட பெண்களுக்கு அதை (செய்யாது) விடுவதில் சலுகை அளிக்கப்பட்டுள்ளது என நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (رضي الله عنه) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதார நூல்: புகாரி).

அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள். ஸபிய்யா (ரழி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டது பற்றி நபி (ﷺ) அவர்களிடம் நான் எடுத்துக் கூறினேன். அவள் எம்மை (குறித்த நேரத்தில் பயணம் செய்ய விடாது) தடுத்துவிடுவாரோ? என நபி (ﷺ) அவர்கள் கேட்டார்கள். அதற்கு “ஸபிய்யா அவர்கள் ஏற்கனவே **“தவா.ஃ.புல் இ.ஃ.பாழா”** வை முடித்துவிட்டார்கள்” என நபி (ﷺ) அவர்களிடம் கூறப்பட்டது. “அப்படியானால் பிரச்சினை இல்லை”. எனக் கூறினார்கள். (புகாரி)

எனவே **ஹஜ்** கடமையை நிறைவு செய்து விட்டு நாடு திரும்புவோர் அல்லாஹ்வின் ஆலயத்தை ஏழு தடவை வலம் வர வேண்டும்.

## ஸியாரத் பற்றிய விளக்கம்.

அரபு மொழியில் “ஸியாரத்” என்ற சொல் சந்தித்தல், தரிசித்தல் போன்ற பொருளில் மொழியாக்கம் செய்யப்படுகிறது. இஸ்லாமியக் கண்ணோட்டத்தில்: மண்ணறைகளை சந்தித்து நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கற்றுத் தந்த பிரார்த்தனையை மண்ணறைவாசிகளுக்காகக் கூறுவது **ஸியாரத்** என அழைக்கப்படுகின்றது.

ஒருவர் நாட்டில் உள்ள முஸ்லிம்களின் பொது அடக்கஸ்தலங்களுக்குச் சென்று அங்கு அடங்கப் பெற்றிருக்கும் முஸ்லிமான மக்களுக்கு நபிமொழிகளில் வந்திருக்கும் ஸலாத்தைக் கூறி, அவர்களின் மறுமை வாழ்விற்காக பிரார்த்திப்பது போன்று உலகிலுள்ள முஸ்லிம்களின் எந்த மண்ணறைகளுக்குச் சென்றாலும் அதனைக் கடைப்பிடிக்க வேண்டும். அதற்கென குறித்த தினம், நேரம் என்பது மார்க்கத்தில் வரையறை செய்யப்படவில்லை.

## ஸியாரத் பற்றிய தவறான பார்வை

ஒரு சிலர் மக்கா, மதீனா சென்றால் மாத்திரம் ஸியாரத் பற்றி அதிகம் அலட்டிக் கொள்கின்றனர். மற்றும் சிலர் பெருநாள் தினத்தன்று மாத்திரம் மண்ணறைகளைச் சந்திப்பதை வழிமுறையாகக் கொள்கின்றனர். ஹஜ்ஜுக்குச் செல்பவர் மதீனாவிற்குச் சென்று நபியின் மண்ணறையை சந்தித்து விட்டுவரவில்லையானால் அவரது ஹஜ் செல்லுபடியற்றது என பொய்யான ஹதீஸ்களைக் கூறி மக்களை ஏமாற்றும் மற்றொரு பிரவினர், வெள்ளிக் கிழமை நாட்களில் மாத்திரம் ஸியாரத் செய்வது சிறப்பான காரியம் என இட்டுக்கட்டப்பட்ட, பொய்யான ஹதீஸ்களைக் கூறி ஸியாரத் செய்வோர் என பல நிலைகளில் உள்ளனர்.

ஹஜ் காலங்களில் நபியின் மண்ணறையை ஸியாரத் செய்வதன் அவசியம் பற்றி சிலர் அழுத்தம் கொடுப்பதைப் பார்க்கின்றோம். இது இஸ்லாமிய நடைமுறைக்கு முரணானதாகும்.

ஆகவே, நாம் நாட்டுக்குத் திரும்பிச் சென்றாலும் மண்ணணறைகளைச் சந்தித்து, மங்கிப்போன இந்த நபிவழியை உயிர்ப்பித்து மண்ணறைவாசிகளிடம் தமது தேவைகளை முன்வைக்கும் இணை

வைப்பிற்கு முற்றுப்புள்ளி வைத்து, சுன்னாவை அறிமுகம் செய்வது நமது கடமையாகும்.

**ஸியாரத்தின் போது கூறவேண்டிய பிரார்த்தனை**

**السَّـلَامُ عَلَـيْكُمْ دَارَ قَـوْمٍ مُـؤْمِنِينَ وَإِنَّـا إِنْ شَـاءَ اللَّـهُ بِكُـمْ لَاحِقُـونَ**

**“அஸ்ஸலாமு அலைக்கும் (D)தார கௌமின் மு.்.மினீன். வஇன்னா இன்ஷா அல்லாஹுʺ பிகும் லாஹிகூன்” (புகாரி).**

**பொருள்:** இறை நம்பிக்கையாளர் கூட்டமே உங்கள் மீது சாந்தி நிலவட்டும். அல்லாஹ்வின் நாட்டப்படி நாமும் உங்களுடன் இணையக் கூடியவர்களே!

**மற்றுமொரு துஆ.**

**اَلسَّلاَمُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُؤْمِنِيْنَ وَأَتَاكُمْ مَا تُوْعَدُوْنَ. غَدًا مُّؤَجَّلُوْنَ وَإِنَّا إِنْ شَاءَ اللهُ بِكُمْ لاَحِقُوْنَ**

“அஸ்ஸலாமு அலைக்கும் **(D)**தார கௌமின் மு.்.மினீன். வஅதாகும் மாதூஅ**(D)**தூன். ந**(D)**தன் முஅஜ்ஜலூன். வஇன்னா இன்ஷா அல்லாஹுʺ பிகும் லாஹிகூன்”

**பொருள்:** இறை நம்பிக்கையாளர் கூட்டமே உங்கள் மீது சாந்தி நிலவட்டும். உங்களுக்கு விதிக்கப்பட்டது உங்களை வந்தடைந்து விட்டது. நாம் நாளைவரை விட்டுவைக்கப்பட்டிருக்கிறோம். அல்லாஹ்வின் நாட்டப்படி நாமும் உங்களை வந்தடையக் கூடியவர்களே!

**மற்றுமொரு துஆ.**

**السَّلَامُ عَلَى أَهْلِ الدِّيَارِ مِنْ الْمُؤْمِنِينَ وَالْمُسْلِمِينَ وَيَرْحَمُ اللَّهُ الْمُسْتَقْدِمِينَ مِنَّا وَالْمُسْتَأْخِرِينَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَلَاحِقُونَ** (مسلم)

“அஸ்ஸலாமு அஹ்லதa;(D)தியாரி மினல் மு.ஃ.மினீன் வல்முஸ்லிமீன், வயர்ஹமில்லாஹுல் முஸ்தக;(D)திமீன மின்னா, வல் முஸ்த.ஃ.ஹிரீன். வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன்”

**பொருள்:** நம்பிக்கையாளர்களான, முஸ்லிம்களான வீட்டுடையார் மீது (அல்லாஹ்வின்) சாந்தி நிலவட்டுமாக! எம்மில் முந்திச் சென்றோருக்கும், பின்னால் வருவோருக்கும் அல்லாஹ் அருள்பாலிப்பானாக! அல்லாஹ்வின் நாட்டப்படி நாமும் உங்களை வந்தடையக் கூடியவர்களே!

### மஸ்ஜிதுன் நபவிக்காகவே ஸியாரத்.

மதீனா செல்வோர் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களின் பள்ளியைத் தரிசிக்கும் நோக்கிலேயே பயணம் செய்ய வேண்டும். அவர்களின் கப்ரை மாத்திரம் தரிசிப்பதாக இருக்கக் கூடாது.

“எனது பள்ளியில் ஒரு தொழுகை தொழுவது உலகிலுள்ள ஏனைய பள்ளிகளின் ஆயிரம் தொழுகைக்கு சமமானதாகும். மஸ்ஜிதுல் ஹராம் (க.ஃ.பா ஆலயம்) பள்ளிவாசலைத் தவிர” என நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கூறினார்கள் (புகாரி. முஸ்லிம்).

எனது இந்தப் பள்ளி, மஸ்ஜிதுல் ஹராம் (மக்கா) பள்ளிவாசல், மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளிகளுக்கே தவிர (உலகின்) வேறு எந்தப் பள்ளிகளுக்கும் நன்மை நாடிப் பயணம் செய்யக் கூடாது என நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி. முஸ்லிம்).

எனவே நமது பயணத்தில் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களின் பள்ளியைத் தரிசிக்க செல்வதாக நிய்யத் செய்து கொள்ள வேண்டும்.

### மஸ்ஜிதுன் நபவியை அடைந்ததும்...

மஸ்ஜிதுன் நபவியை அடைந்ததும் பள்ளியில் பிரவேசிக்கும் ஒழுங்கைப் பேணிப் பிரவேசித்து “தஹிய்யதுல் மஸ்ஜித்” இரண்டு ரகஅத் தொழுதல். பின்னர் நபிகள் நாயகம் (ﷺ) அவர்களின் மண்ணறைக்கு வந்து,

السَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ “அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி, வபரகாதுஹு” நபியே! உங்கள் மீது சாந்தியும்,

அல்லாஹ்வின் அருளும், பாக்கியங்களும் உண்டாகட்டுமாக!" எனத் தொழுகையில் கூறும் பிரார்த்தனையைக் கூறுதல். பின் அபூபக்கர் (ﷺ) அவர்களின் மண்ணறையை நோக்கி السلام عليك يا أبا بكر "அஸ்ஸலாமு அலைக்க யா அபாபக்ர்"அபூபகர் (ﷺ) அவர்களே உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும் என்றும், பின் உமர் (ﷺ) அவர்களின் மண்ணறையை நோக்கி السلام عليك يا عمر "அஸ்ஸலாமு அலைக்க யா உமர்" "உமர் (ﷺ) அவர்களே உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும் என்றும் கூறி வெளியேறுதல். அல்லது கிப்லாவை முன்னோக்கியவாறு பிரார்த்தித்தல். நபி (ﷺ) அவர்களிடம் பிரார்த்திப்பது ஹராமாகும்.

## ஹஜ்ஜை முடித்து நாடு திரும்பும் போது

நபிகள் நாயகம் (ﷺ) அவர்கள் பெரும்பட்டாளத்துடனோ, அல்லது சிறுபட்டாளத்துடனோ போர்க்களம் சென்று அல்லது பயணத்தை முடித்து, அல்லது ஹஜ் அல்லது உம்ராக் கடமைகளை முடித்துத் திரும்பினால்

لاَإِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ . آئِبُوْنَ تَائِبُوْنَ عَابِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ صَدَقَ اللهُ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ ٱلأَحْزَابَ وَحْدَهُ .

லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு, லஹுல் முல்க் வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷையின் கதீர், ஆயிபூன, தாயி **(B)**பூன,ஆ**(B)** பிதூன லிரப் **(B)**பினா ஹாமிதூன். ஸதகல்லாஹு வ.ஃ.தஹு, வநஸர அ**(B)** வஹஸ**(Z)** மல் அஹ்**(Z)**ஸா**(B)**ப வஹ்தஹ் எனக் கூறுவார்கள். (புகாரி, முஸ்லிம்).

**பொருள்:**

வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு எந்த இணையும் இல்லை.

ஆட்சியும், புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்து வஸதுக்கள் மீதும் ஆற்றல் மிக்கவன். நாம் இறைவனின் பக்கம் மீளக் கூடியவர்கள். அவனிடம் பாவமன்னிப்பு வேண்டுபவர்கள்.எமது இரட்சகனை வணங்கி, அவனைப் புகழ்கிறோம். அல்லாஹ் தனது வாக்கை உண்மைப்படுத்தினான். அவனது அடியாருக்கு உதவியளித்தான். (நமது) எதிரிகளை தனித்தவனாக நின்றே தோற்கடித்தான். (புகாரி, முஸ்லிம்).

**துணை நின்றவை:-**

1) அல்குர்ஆன்.

2) புகாரி. முஸ்லிம், அபூதாவூத், நஸயி, மற்றும் ஹதீஸ் பேழைகள்.

3) ஸாதுல் மஆத். இமாம் இப்னுல் கய்யிம் (ரஹ்).

4) பிக்ஹுல் இபாதாத். இமாம் முஹம்மத் பின் ஸாலிஹ் அல்உஸைமீன் (ரஹ்)

5) ஸி∴பதுல் ஹஜ், வல்உம்ரா. இமாம் அப்துல்லாஹ் பின் அப்தில் அஸீஸ் இப்னு பாஸ் (ரஹ்).

(6) ∴பத்ஹுல்பாரி இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்)

(7) ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம் இமாம் நவவி (ரஹ்)

(8) சுனன் அத்தாரமி. இமாம் தாரமி (ரஹ்) .

(9) ஷரஹுல் மும்தி∴ . முஹம்மத் பின் ஸாலிஹ் அல்உஸைமீன் (ரஹ்)

(10) அவ்னுல் ம∴பூத் ஷரஹ் சுனன்அபீதாவூத் இமாம் முபாரக்பூரி (ரஹ்)

(11) ∴பதாவா "நூறுன் அலத்தர்ப்" இமாம் இப்னு உஸைமீன் (ரஹ்)

(12) அல்மக்தபதுஷ்ஷாமிலா. இலத்திரணியல் நூலகம்.

(13) இஸ்லாமிய இணைய தளங்கள்

(14) அல்மகதபா அஷ்ஷாமிலா மின் நூலகம்.

**வினயமான வேண்டுகோள்!**

**அன்பான சகோதர, சகோதரிகளே! உங்கள் கரங்களில் தவழும் இந்தக் கையேட்டில் குறைகள், அல்லது அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவிற்கு மாற்றமான கருத்துக்கள் இடம்பெற்றிருப்பின் ஆதாரத்துடன் சுட்டிக்காட்டும் படி உங்களை அன்பாகவும், பணிவாகவும் வேண்டிக் கொள்கின்றேன்.**

**E: mail: rizwanmadani71@yahoo.com**